*Kumaraṉ*

*Āram 19, muttu 3*

*September 04, 1941*

Record no. 313

REGD. NO. M. 1823. 14 பக்கங்கள். KUMARAN WEEKLY.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5–0–0
ஆறு மாதம் 3–0–0
சிலோன் ரூ. 6–0–0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஷ 1-க்கு ரூ. 7–0–0

# குமரன்

விளம்பரம்.

கோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2–0–0
வியாபார சம்பந்தமானது ரூ. 0–12–0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது — PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 19. | காரைக்குடி, விஷு-ஹு ஆவணி-மீ 19-உ (4—9—41) | முத்து 3

## இரங்கூன் நகரம் காலி செய்யும் திட்டம்

நெருக்கடி காலத்தில் இரங்கூன் நகரத்திலிருந்து பொதுமக்கள் காலி செய்வது சம்பந்தமாக பர்மா அரசாங்கத்தார் வெளியிட்டிருக்கும் **இரங்கூன் நகரம் காலிசெய்யும் திட்டத்**தின் சாரம் வருமாறு:—

★

இரங்கூனிலிருந்து வெளியில் செல்ல விரும்புபவர்கள், குறைந்த கால அறிவிப்பின்மீது மேல் பிரதேசங்களுக்குச் செல்ல வேண்டிய ஏற்பாடுகள் செய்து கொள்ள வேண்டும் முதல் ஏற்பாட்டுப் பகுதியின் பொழுது முன்னெச்சரிக்கையாக பள்ளிக்கூட மாணவ, மாணவிகள், மற்றும் மற்றவர்களது உதவிகளை எதிர்பார்க்கும் அங்கஹீனர்கள், நோயாளிகள் முதலியவர்களை பத்திரமான இடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பதை எதுவும் தடை செய்யாது.

முக்கியமான வேலைக்காரர்கள் எனப் பதிவு செய்துகொண்டிருப்பவர்கள் எல்லாக் காலங்களிலும் சட்டத்தின் பிரகாரம் தங்கள் உத்தியோகங்களிலிருந்து வேலை செய்யவேண்டிய கடமை கொண்டிருக்கிறார்கள். இந்த முக்கியமான வேலைக்காரர்கள் தங்குவதற்கு சில இடங்கள் அளிக்கப்படும்.

ஆகாய விமானத் தாக்குதல் ஏற்படின், இரங்கூனிலுள்ள எல்லாப் பள்ளிக்கூடங்களும் மூடிவிடப்படும், பள்ளிக்கூட மாணவர்கள் தங்கள் பெற்றோர்களுடன் நகரத்தில் இருந்து காலி செய்யப்படுவார்கள். பள்ளிக்கூடங்களை அப்படியே வெறு பத்திரமான இடங்களுக்கு மாற்றிச் செம்மையாக நடத்திவருவதென்பது இயலாத காரியம்.

தாக்குதல் காலங்களில் போக்குவரத்துக்கு எந்தெந்த ரோடுகளை ராணுவத்தார் உபயோகிப்பார்களென்பதும், பொது மக்கள் எந்தெந்த ரோடுகளை உபயோகிக்கலாம் என்பதும், நகரத்தைக் காலி செய்து செல்லும் மக்கள் எந்தெந்த மார்க்கங்களாகச் செல்ல வேண்டும் என்பதும் ரோடு டிரான்ஸ்போர்ட் ரிக்யுஸிஷனிங் ஆபீசரால் அறிவிக்கப்படும்.

போலீஸ் உத்தியோகஸ்தர்களும், ராணுவ உத்தியோகஸ்தர்களும் கலந்து ஆலோசித்து, காலி செய்யும் திட்டத்தின் பிரகாரம், மக்கள் நகரத்தைக் காலி செய்து செல்லும் பொழுது ரயில்வே ஸ்டேஷன்களிலோ அல்லது ஸ்டீமர் ஜெட்டிகளிலோ எத்தகைய களவு, கொள்ளை முதலியவைகள் நடைபெறா வண்ணம் பாதுகாத்துக் கொள்ளத்தக்க ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். வழிகளிலும், மற்ற இடங்களிலும் காலி செய்து செல்லும் மக்களுக்குத் தீங்கு நேரிடா வண்ணம் போலீஸாரும், ராணுவத்தினரும் தக்க ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர்.

சில இடங்களில் இளைப்பாறும் இடங்கள் (Rest Camps) அமைக்கப் பெற்றிருக்கின்றன. இந்த இடங்கள், இரங்கூனிலிருந்து சீக்கிரமாகச் செல்லத் தக்க இடங்களில் அமைக்கப் பெற்றிருக்கின்றன. ஓரே சமயத்தில் சுமார் 7,500 மக்கள் இவ்விடங்களில் தங்கலாம். தண்ணீர் வசதி, உணவு வசதி, மற்ற கக்கூஸ் வசதி முதலியவைகள் இங்கு செய்யப்பட்டிருக்கின்றன.

நெருக்கடியான நிலைமை ஏற்படின் ரங்கூனிலிருந்து காலியாகும் மொத்த ஜனங்களுக்கும் டிஸ்பெர்ஷன் கியாம்புகளில் தங்க இடம், உணவு, தண்ணீர், மருத்துவ உதவி முதலியவை வழங்கப் பெறும். இங்கிருந்து மக்கள் ரயில் மூலமாகவோ, அல்லது ஸ்டீமர்கள் மூலமாகவோ குறித்த இடங்களுக்கு அனுப்பப்படுவார்கள். இந்த கியாம்புகளில் இரு பிரிவினர்கள் தங்குவார்கள். பலஹீனம், வயோதிகம் முதலியவைகளைச் சார்ந்தவர்கள் ஒரு பிரிவினர்; இவர்கள் அரசாங்க ஆதரவில், மேல் பிரதேசங்களில் அரசாங்க விடுதிகளில் தங்குவார்கள். மற்ற பிரிவினர், தங்கள் விருப்பப்படி சில இடங்களுக்குச் சென்று தங்கலாம். இறுதியான இடத்திற்குச் செல்வதற்கு முன், இடையில் தங்குவதற்குச் சில இடங்கள் ஏற்பாடு செய்யப் பெற்றிருக்கின்றன. இவ்விடங்களில் தங்கியிருந்துவிட்டு இவர்கள் இறுதியான இடங்களுக்குச் செல்லலாம்.

நகரத்தைக் காலி செய்து வரும் மக்களுக்கு சமைத்த உணவு, தண்ணீர் வசதி முதலியவைகள் வழங்கப்படும். சமைக்கும் தொழில் முதலியவைகள், சம்பளம் பெறும் ஆடவர்களால் செய்யப்படும், பரிமாறுதல் முதலியவைகள் பெண் வாலண்டியர்களால் செய்யப்பெறும்.

இதற்காக (1) ரேஸ்கோர்ஸ் டிஸ்பெர்ஷன் கியாம்பிற்காக 324 பெண் வாலண்டியர்கள் வேண்டியிருக்கிறது. (2) தெங்காஞ்சூன் டிஸ்பெர்ஷன் கியாம்பிற்காக 168 பெண் வாலண்டியர்கள் வேண்டியிருக்கிறது. (3) சின்சாங்பே அரண்மனை டிஸ்பெர்ஷன் கியாம்பிற்காக 96 பெண் வாலண்டியர்கள் வேண்டியிருக்கிறது. மொத்தம் 588 பெண் வாலண்டியர்கள் தேவையாய் இருக்கிறது.



இரங்கூன் ரேஸ்கோர்ஸ் டிஸ்பெர்ஷன் கியாம்பும், சின்-சாங் அரண்மனை டிஸ்பெர்ஷன் கியாம்பும், ரயில்வேப் பிரயாணிகளுக்கு மட்டும் தங்கும் இடங்களாகும். இரங்கூன் ரேஸ்கோர்ஸ் டிஸ்பெர்ஷன் கியாம்பில் சுமார் 10,000 பேர்கள் தங்கியிருக்கலாம். சின்-சாங் அரண்மனை டிஸ்பெர்ஷன் கியாம்பில் சுமார் 3,000 பேர்கள் தங்கியிருக்கலாம்.

தெங்காஞ்சூன் டிஸ்பெர்ஷன் கியாம்பில் படகு, ஸ்டீமர் முதலியவைகளில் ஆற்று மார்க்கம் செல்லும் பிரயாணிகள்தான் தங்கவேண்டும். இதில் சுமார் 5,000 பேர்கள் தங்கியிருக்கலாம்.

நான்காவதாக கம்பையிலும் ஒரு டிஸ்பெர்ஷன் கியாம்ப் இருக்கிறது. ரேஸ்கோர்ஸ் டிஸ்பெர்ஷன் கியாம்பில் அதிகமான ஆட்கள் வந்து குழுமிவிட்டால், இடம் வேண்டுவதற்காகச் சமீபத்தில் கம்பையில் ஒரு டிஸ்பெர்ஷன் கியாம்ப் அமைக்கப்பெற்றிருக்கிறது. இதில் சுமார் 5,000 பேர்கள் தங்கலாம்.

காலி செய்யும் திட்டம் அமுக்கு வருமானால், இரங்கூனிலிருந்து ரயில் மார்க்கமாக வெளியேற விரும்பும் எல்லாப் பிரயாணிகளும் எந்த ஸ்டேஷனிலும் எந்த ரெயிலிலும் ஏறிச் செல்லலாம். இதே போன்று ஆற்று மார்க்கமாகச் செல்ல விரும்புபவர்களும் எந்தப்பாலத்திலிருந்தும், எந்த ஸ்டீமர் மூலமாக வேண்டுமானாலும் செல்லலாம். கால் நடையாக நடந்து செல்பவர்கள், எந்த டிஸ்பெர்ஷன் கியாம்பிற்கும் செல்லலாம்.

விமானத் தாக்குதல்களினால் சேதமாகி, வசிப்பதற்கு உபயோகமற்றதாயிருக்கும் வீடுகளுக்குப் பதிலாக, முக்கியமான வேலைக்காரர்கள் தங்குவதற்கு சில இடங்கள் பொறுக்கி வசதி செய்யப்பெற்றிருக்கின்றன. இந்த இடங்கள் ரேஸ்கோர்ஸுக்கு அருகிலும், கொக்கைன்-டாடா கல் ரோடிலும் இருக்கின்றன. இவை இரங்கூனுக்கு அருகாமையிலிருப்பதுடன் பத்திரமான இடங்களாகவும் இருக்கின்றன. இதனுடன் இவைகளுக்குச் செல்வதற்குச் சுலபமான பிரயாண மார்க்கங்களுமிருக்கின்றன.

### பலவீனர்களுக்கு விடுதிகள்

டிஸ்பெர்ஷன் கியாம்புகள், ரெஸ்ட் கியாம்புகள் முதலியவைகளை தவிர்த்து பர்மாவின் மேல் பிரதேசத்தில் சுமார் 100,000 பலவீனர்கள் தங்குவதற்கென விடுதிகள் ஏற்பாடு செய்யப் பெற்றிருக்கின்றன. வயோதிகர்கள், பலவீனர்கள் ஆகிய இவர்களில் பெரும்பான்மையோர் இந்தியர்கள் ஆவர். இவர்கள் முதலில் இரங்கூனிலிருந்து டிஸ்பெர்ஷன் கியாம்புகளுக்கு அழைத்துச் செல்லப் பெறு

(14-ம் பக்கம் பார்க்க)

## சென்னை ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை மாலை 4 முதல் இரவு 10-30 வரை.

தமிழில் செய்திகள்:— காலை 7-40 மி, பகல் 2-00; இரவு 7-35.

O

### செப்டம்பர் 4உ வியாழன்

2·10—2·40 கே. அனந்தாச்சாரி பாட்டு
5·00—5·45 குமாரி அனுசூயா பாட்டு
6·30—7·00 வி. வெங்கட சுப்பைய ரூப்தா பாட்டு
7·50—9·15 திருச்சியில் உள்ளபடி

★

### 5உ வெள்ளி

5·00—5·45, 6·30—7·00 கே. ஆர். குமாரசாமி பாட்டு
6·05—6·30, 7·50—8·30 ஸ்ரீமதி பி. சுப்பம்மா பாட்டும் வீணையும்
8·30—8·45 நளதமயந்தி—நாடகம்

★

### 6உ சனி

5·00—5·45, 6·30—7·00 ஸ்ரீமதி வி. ராஜரத்னம் வாத்திய கோஷ்டியுடன் பாட்டு
6·05—6·30 உபதிருஷ்டா சுப்ரமண்ய சாஸ்திரி பாட்டு
7·50—9·00 மகாராஜபுரம் விஸ்வநாதய்யர் பாட்டு, வி. சேதுராமய்யா வயலின், கே. ராமநாதன் மிருதங்கம்

★

### 7உ ஞாயிறு

2·10—2·40, 4·00—4·30 ஸ்ரீமதி டி. வி. சுப்புத்தாயி பாட்டு
5·00—5·45, 6·30—7·00 வி. சந்தானமய்யா வயலின்
6·05—6·30 ஜி. என். பஞ்சநதன் பாட்டு
7·00—8·30 சுகைச்சண்ட சோழன்—நாடகம்
8·30—9·00 ஸ்ரீமதிகள் எம். கல்பகம், எம். கமலா பாட்டு

★

### 8உ திங்கள்

1·35—2·00 வி. பி. ராமாமிர்த ராஜு பாட்டு
5·00—5·45, 6·05—6·30 ஸ்ரீமதி டி. ராமதிலகம் பாட்டு
6·30—7·00, 10·00—10·30 வி. ஸ்ரீகண்ட ஐயர் வீணை
7·50—9·15 அபு ஹாஸன்—ஆங்கில நாடகம்

★

### 9உ செவ்வாய்

2·10—2·40 ஆர். கணேசன் பாட்டு
5·00—5·45 ஸ்ரீமதிகள் அம்ருதவல்லி, சுந்தரவல்லி பாட்டு
6·05—6·30 வேலூர் எஸ். குப்புஸ்வாமி க்ளாரினெட்
6·45—7·00 சகோதர வாஞ்சை—நாடகம்
7·50—9·00 மைசூர் வி. வெங்கடகிரியப்பா வீணை

★

### 10உ புதன்

1·35—2·00 கே. ஹரிஹர ஐயர் வீணை
5·00—5·45, 7·50—8·30 திருவெண்காடு சுப்ரமண்ய பிள்ளை நாதசுரம்
6·05—6·30 பூவனூர் ஸ்ரீனிவாச பாகவதர் பாட்டு

★

### 11உ வியாழன்

(பாரதி திருநாள்)

2·10—2·40 டி. ஜி. எஸ். வீரராகவாச்சாரி பாட்டு
5·00—5·45 எஸ். தக்ஷிணாமூர்த்தி சாஸ்திரி ...
6·30—7·15, 8·45—9·15 ரூபகார்த்தம் ஸி. ஸுப்ரமண்ய பாரதியார் கவிதைகள் [ஸ்ரீமதி என். வி. வஸந்தகோகிலமும், கொத்தமங்கலம் ஸ்ரீனிவாஸனும்]
7·50—8·45 திருச்சியில் உள்ளபடி

## பிரெஞ்சு மாதின் சத்தியாக்கிரகம்

### சுதந்தரப் பிரசுரம் வழங்கியதற்கு 13 மீ தண்டனை

சுதந்தர பிரெஞ்சுப் பிரசுரங்கள் வழங்கியதற்காக விச்சி கோர்ட்டாரால் பதின்மூன்று மாதக் காவல் தண்டனை விதிக்கப்பட்ட பெர்ட்ராண்ட் டாஸ்டியர் என்னும் 20 வயது மாது தன் மீது போலீஸார் சாட்டிய தேசத் துரோகக் குற்றத்தை எப்படி நீதிபதிகள் மீதே சுமத்தினுள் என்னும் விவரம் மாட்ரிட்டிலிருந்து ஹாரோல்ட் கார்டோஸோ என்பவர் டெய்லி மெயிலுக்கு அனுப்பியுள்ள தந்தியிலிருந்து தெரியவருகிறது.

"நீங்கள் வேண்டுமானுல் அதை அப்படிக் கூறிக் கொள்ளுங்கள். ஆனுல் பிரெஞ்சு மக்கள் மட்டும் அதற்கு வேறு பெயர் தான் கூறுவார்கள் என்று எனக்கு நிச்சயமாய்த் தெரியும்' என்று அவள் கூவினுள்.

இந்த வழக்கு, பிரான்ஸில் நடக்கும் வேறு பல வழக்குகளைப் போலவே, விச்சி சர்க்காரின் அடக்குமுறை ஆட்சியையே காட்டுகிறது. ஸ்ரீ டாஸ்டியர் தான் செய்த குற்றத்துக்காக நைம்ஸில் உள்ள பொதுச் சிறையில் சகல வகுப்புக்களையும் சேர்ந்த பெண் கைதிகளோடு காலங்கழிக்கவேண்டும். அவள் செய்த "குற்றம்" இதுதான்-அவளும், 16 வயதுடைய அவள் தம்பியும் அவனுடைய பள்ளித் தோழர்கள் இருவரும் அந்நிய வல்லர சொன்றுக்கு அனுகூலமானவையும் ஜெர்மனியோடு ஒத்துழைப்பதைத் தாக்கிக் கூறுபவையுமான பிரசுரங்களை வழங்கியதற்காகக் குற்றஞ்சாட்டப்பட்டார்கள்.

ஸ்ரீ டாஸ்டியர் வக்கில் ஒருவரும் தனக்காக வாதிக்க வேண்டிய தில்லை யென்று கூறிவிட்டுத் தானே தன் வழக்கைப் பற்றி வாதிக்க ஆரம்பித்தாள். தன் குடும்பம் என்றுமே அரசாட்சியை ஆதரிப்பது தான் என்று அவள் கூறினுள். அவர்கள் முதலில் மார்ஷல் பெத்தானை ஆதரித்தார்கள். ஆனுல் டார்லான் அச்சைப் பிடித்துக் கொண்டு தொங்கியது அவனைத் திடுக்கிடச் செய்து விட்டதாம். 'இப்படி மான ஈனமில்லாமல் தாம் விட்டுக் கொடுத்துக் கொண்டேவந்திருப்பதை, கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஆட்சேபித்தே தீரவேண்டும் என்று அவள் கர்ஜித்தாள்.

ஆகவே மனச்சாட்சியின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து டாஸ்டியர் சிறைக்கூடம் செல்லத் துணிந்தாள். அவள் தம்பிக்கு 6 மாதம் காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அவனுடைய தோழர்களுக்கு 4 மாத தண்டனை கிடைத்தது. ஆனுல் குற்றம் செய்பவர்கள் சம்பந்தமான சட்டப்படி மூவரும் விடுதலை செய்யப்பட்டு விட்டார்கள்.

### ஸ்ரீமதி ஜேதி

சிந்து சட்ட சபைத் தலைவர் ஐ. ஸயத் மிரான் முகமதுஷா தேக அசௌக்கியத்தின் காரணமாக பூனு செல்வதால், அவருக்குப் பதிலாக டிபுடி தலைவராக இருக்கும் ஸ்ரீமதி ஜேதி டி. ஸிபாஹிமலானி சட்ட சபைத் தலைவரின் வேலையைப் பார்த்து வருவார் எனத் தெரிகிறது.

ஒரு ஆகாயக் கப்பலினின்றும் இறக்கப்பட்ட பாராசூட் படையினர் சிதறி இறங்கும் காக்ஷி.



## திருச்சி ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1 முதல் 2-30 வரை மாலை 5 முதல் இரவு 10 வரை.

தமிழில் செய்திகள்:— காலை 7-40; பிற்பகல் 2-00; இரவு 7-35.

O

### செப்டம்பர் 4உ வியாழன்

1·35—2·00 ஸ்ரீமதி வி. எஸ். சாரதாம்பாள் பாட்டு
5·00—5·45, 6·05—6·30 எ. மஹமத்தாவூத் பாட்டு
7·50—9·20 கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை வயலின்

★

### 5உ வெள்ளி

2·05—2·30 கடத்தூர் சங்கர ராமய்யர் வீணை
5·15—6·00, 7·50—8·30 குளிக்கரை எஸ் பிச்சையப்ப பிள்ளை நாதசுரம்
6·05—6·30, 8·45—9·20 பி. மலையப்ப சாஸ்திரி பாட்டு

★

### 6உ சனி

1·35—2·00 ஸ்ரீமதி ஆர். ராஜ ராஜேச்வரி பாட்டு
2·05—2·30, 6·05—6·30 மைலம் பி. வஜ்ரவேலு முதலியார் பாட்டு
7·50—9·00 சென்னையில் உள்ளபடி

★

### 7உ ஞாயிறு

5·00—5·45, 7·50—8·30 எல். முத்தையா பாகவதர் சங்கீத உபன்யாஸங்கள்
6·05—6·30, 8·30—9·20 பூதலூர் எஸ். கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரி கோட்டு வாத்யம்

★

### 8உ திங்கள்

1·35—2·00, 6·05—6·30 வி. பி. லெக்ஷ்மி நாராயண மேனன் பாட்டு
5·00—5·45 செம்பொன்னூர் கோவில் எஸ். ஆர். கிருஷ்ண மூர்த்தி பிள்ளை, நாதசுரம்.
7·50—9·20 மன்னார்குடி ராஜகோபால பிள்ளை பாட்டுக் கச்சேரி

★

### 9உ செவ்வாய்

1·33—2·00, 6·05—6·30 டி. ஆர். விசுவநாதய்யர் பாட்டு
5·00—5·45 ஸ்ரீரங்கம் ராமஸ்வாமி அய்யங்கார் வீணை
7·50—9·00 சென்னையில் உள்ளபடி
9·00—9·15 விரிவான ரஸ்தா—நாடகம்

★

### 10உ புதன்

5·15—6·00, 8·40—9·20 சேத்தூர் சுந்தரேச பட்டர் வயலின்
6·05—6·30, 7·50—8·40 திட்டே கிருஷ்ணய்யங்கார் பாட்டு

★

### 11உ வியாழன்

(பாரதி திருநாள்)

5·00—5·45, 6·05—6·30 வாளாடி ஸ்ரீமதி எம். ருக்மணி புல்லாங்குழல்
7·00—7·15 பாரதியாரின் மேதை 'கல்கி' பேச்சு
7·15—7·30 துயில்: பாரதியாரின் பாட்டைத் தழுவித் தயாரித்த ஒரு சித்திரம். ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி எழுதியது.
7·50—8·45 எம். எம். தண்டபாணி தேசிகர் பாட்டு பாரதியாரின் பாடல்கள்
8·45—9·20 சஞ்சல கமனம்—நாடகம்





## அத்தரும் எண்ணெயும் விளையும் தேசம்

### இரானின் மாண்பு

★

சென்ற வார ஆரம்பத்தில் இரான் ஒரு நூதன யுத்தத்தைக் காண நேர்ந்தது. ஸோவியத்தும், பிரிட்டனும் இரான் மீது கூட்டு நடவடிக்கை எடுத்துக் கொண்டன. நான்கு நாட்களுக்குப் பிறகு இரான் சர்க்கார், தங்கள் ஆயுதங்களைக் கீழே எறிந்துவிட்டு சமாதானத்துக்கு தங்கள் கைகளை நீட்டினர். அந்த யுத்த பூமியும் ஏதோ ரத்த வெள்ளத்தைக் காணவில்லை! இது இரான் மன்னரின் புத்திசாலித்தனத்தைக் காட்டுவதாகவும் இருக்கக்கூடும். திடீரென்று 3000 ஜெர்மன் ஏஜெண்டுகள் இரானில்குடிபுகஆரம்பித்தனர். நிலைமை நெருக்கடியாயிற்று. ஆனுல் இந் நெருக்கடிக்காக இரானியரின் ரத்தம் சிந்துவதா என்ற இன்னெரு பிரச்னையும் எழுந்தது. இந்த இரண்டு பிரச்னைகளையும் ஒரே அடியில் தீர்த்துவிட்டது மன்னரின் சமாதான யோசனை. பிரிட்டிஷ் ஸோவியத் அதிகாரிகள் இரானில் புகுந்து தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள எல்லா ஏற்பாடுகளும் செய்து வருகின்றனர். ஜெர்மன் ஆதிக்கம் வலுக்காதபடி அவர்கள் இனி பார்த்துக் கொள்வார்கள். இந்தப் பிரச்னையைத் தீர்க்க எழுந்த யுத்தமும் நின்றுவிட்டது. இரான் சர்க்கார் தங்கள் கடமையைச் செய்துவிட்டதாக இப்போது நிம்மதியாக இருப்பார்கள்.

இரான், அரசியல் துறையில், ஒரு கேந்திரஸ்தானத்தை வகிக்கிறது. இரானில் எந்த அயல்நாடு ஸ்வாதீனத்தைப் பெற்றுலும் சரி- அதனுல் பாகுவிலுள்ள ரஷ்ய காகேஸியன் எண்ணெய்க் கிணறுகளையும், காஸ்பியன் கடலைச் சுற்றியுள்ள ரஷ்யக் கிழக்குப் பிரதேசங்களையும் கண்காணிப்பில் வைத்துக் கொள்ள முடியும். மேலும் துருக்கியின் சப்ளை மார்க்கத்தையும் வெகுவாக அதனுல் கட்டுப்படுத்தமுடியும்.

இந்தியா, சீன இவைகளின் சரித்திரத்தைப் போல இரானும் மிகவும் பழங்கால நாகரிகத்தைக் கண்ட தேசம். இத்தேசத்தின் ஆதிகுடிகளான ஸமேரியர்கள் காலத்தில் கூட அதன் நாகரிகம் சிறப்பாகவே இருந்தது. பழங்கால அரசர்களாகிய, கைரஸ், காம்பிஸஸ், டேரியஸ், ஸர்க்ஸிஸ் போன்றவர்களின் கீர்த்திப் பிரதாபங்கள் உலக சரித்திரத்திலே ஒரு அங்கம் வகிக்கின்றன. தற்போது கூட பழைய நூல் ஆராய்ச்சியாளர்களின் (archaeologists) முயற்சியால் பெர்ஸிபாலிஸ், சூஸா முதலிய இடங்களிலிருந்து வெட்டி எடுக்கப்பட்ட பழங்காலப் பொருள்களிலிருந்து அதன் நீண்ட காலச் சரித்திரம் நன்ருக விளங்குகிறது. சூஸா நகரம் 1வது டேரியஸ்ஸின் முக்கிய வாசஸ்தலமாக இருந்தது. இங்கு தான் "ஹாமுராபியின் சட்டம்' (Code of Hamurabi 2100 B. C.) கண்டுபிடிக்கப்பட்டது.

இரான் சென்னை மாகாணத்தைப் போல் நான்கு மடங்கு விஸ்திரணமுடையது; ஆனுல் அதன் ஜனத்தொகை நம் மாகாணத்தில் நாலில் ஒரு பங்குக்கும் குறைவுதான். எங்கு பார்த்தாலும் மலைகள் சூழ்ந்து கிடக்கும். மலைகள் சற்று குறைவான இடங்களில் மணல் பரப்புள்ள பாலை நிலங்கள் காணப்படும். கடலோரமாக உள்ள சிறிய சம வெளிகள் வாழ்க்கைக்கு அவ்வளவாக பயன் தரக் கூடியதாயில்லை. இவைகளை யெல்லாம் நீக்கி விட்டால், பயிர் செய்து வாழ்க்கை நடத்துவதற்கான பாகம் மிகவும் சொல்பம். ஜனத்தொகைக் குறைவினுல் தான் இரானின் கைத்தொழில் அபிவிருத்தி யடையவில்லை எனலாம். என்றுலும் இந்த சிறு ஜனத்தொகையைக் கொண்டு தான் இரான் தன் நாகரிகத்தை உலகுக்கு எடுத்து காட்டி யிருக்கிறது. இரானின் கலைச்செல்வம்பிறநாட்டுச்சிறந்த கலைகளோடு சமத்வம் வகிக்கிறது. மிகவும் வேலைப்பாடமைந்த ரத்ன கம்பளங்கள் அதன் புகழை எங்கும் பரப்பியுள்ளன. இவர்களின் தொழிற் சிற்பம் கிழக்கே சீன வரையிலும், மேற்கே ஹாலந்து வரையிலும் உள்ள பல தேசங்களால் கையாளப்பட்டு வந்திருக்கின்றது. இரானின் தொழிற் சிற்ப அலைகள் இந்தியக் கரைகளிலும் மோதுண்டிருக்கின்றன. முக்கியமாக மொகலாய அரசர்கள் காலத்தில், இரானின் நாகரிகத்தை இந்தியா கண்டிருக்கிறது. அதன் மூலம் உலகம் போற்ற, தாஜ்மஹாலைக் கட்டித்தந்திருக்கிறது.

இரானின் சிறந்த கவிகளுக்குள் முக்கியமானவர் இருவர்; ஓமார் காயம்; ஒருவர் இன்னெருவர் ஸாதி. ஓமார் காயத்தின் ரபியத்-ம், ஸாதியின் ரோஜாத் தோட்டமும் (Garden of Roses) உலகப் பிரசித்தம்.

கைத் தொழில் துறையில் சமீப காலத்தில் இரான் ரொம்பவும் முற்போக்கடைந்திருக்கிறது. பழைய காலத்தில் ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டு, வீடுவாசல்கள் இல்லாமல் ஊரூராய் அலைந்து திரிந்தவர்கள் இப்போது ஒரே இடத்தில் தங்கி கைத்தொழிலை அபிவிர்த்திசெய்வதற்கானவேலைகளில் ஈடுபட்டிருக்கின்றனர். இப்போது ஆயிரக் கணக்கான மில்களும், தொழிற்சாலைகளும் ஆங்காங்கே ஏற்பட்டிருக்கின்றன. எங்குபார்த்தாலும் கூட்டம் கூட்டமாக ஜனங்கள், பாலங் கட்டுவதும் ரயில்பாதைகள் போடுவதுமாக சுறு சுறுப்பான வேலைகளில் ஈடுபட்டிருக்கின்றனர். திடீரென்று மழைக்காலத்தில் காளான் முளைத்த மாதிரி பெட்ரோல் பம்புகள் எங்குபார்த்தாலும் ஏற்பட்டிருக்கின்றன; ஆனுல் பெட்ரோலின் விலையோ எங்கு மில்லாதபடி அங்கு தான் அதிகம். இரான் சர்க்கார் வருமானத்தின் பெரும்பாகம் ஆங்கிலோ—இரானிய எண்ணெய்க் கம்பெனிகளின் மூலம் தான். எண்ணெய் உற்பத்தியில் மூன்ருவது நாடாக அது விளங்குகிறது. முக்கியமான எண்ணெய் சுத்தி செய்யும் தொழிற்சாலைகள் மெய்டன்-ஈ-நப்டுன், கோர்மான்ஷா என்ற இடங்களில் அமைந்துள்ளன. தலைநகரான டெஹ்ரானில், அலங்கார வீதிகள், தற்கால நகரீகத்தில் அமைக்கப்பட்ட கண்கவர் கட்டிடங்கள், உல்லாஸப் பூங்காவனங்கள் முதலியன ஏராளம். அங்கே ஒரு நாடகம் கூட நடிக்கப்படாத ஒரு சிறந்த நாடகசாலை இருக்கிறதாம்! உலகத்திலேயே சிறந்தவைகளில் ஒன்ருகக் கருதப்படும் ரயில்வே ஸ்டேஷன் ஒன்றும் கட்டியிருக்கிருர்கள். ஆனுல் இந்தக் கட்டிடம் கட்டி ரொம்பகாலத்திற்குப் பிறகு தான் ரயில் பாதை அங்கேபோடப்பட்டது. பஞ்சு யந்திரசாலைகள், சர்க்கரை, சிமெண்ட் தொழிற்சாலைகள் முதலியன இப்போது புதிதாக ஏற்பட்டு வருகின்றன. ஆனுல் பண்டைய ஷேர்மான் கம்பளங்கள், குஷான் சில்குகள், இஸ்பஹான் பித்தளைப் பாத்திரங்கள், சூராஸ் அத்தர் இவையெல்லாம் போன இடம் தெரியவில்லை. இதற்கு நாம் என்ன செய்யக்கூடும்!

### பிரதம மந்திரிக்கு லஞ்சம்

ரங்கூனில் வக்கில் என்று சொல்லிக் கொண்டு ஒரு இந்தியர் இமிக்ரேஷன் அபீஸர் பதவி பெற பிரதம-மந்திரிக்கு ரூ 7,000 லஞ்சம் கொடுக்க முயன்றதாகக் குற்றம் சாட்டப்பட்டு கைது செய்யப்பட்டிருக்கிருர்.

## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1940ஷு O. S. No. 300

நா. லெ. லெக்ஷ்மணன் செட்டியார், நா. கரு. நாகப்ப செட்டியார். } வாதிகள்

வாராப்பூர் ராமசாமி சேர்வை மகன் சின்னையா என்ற வெள்ளையன் —3. ஷையூர் ஷையார் தம்பி செம்பட்டயன். } பிரதிவாதிகள்

வாதிகள் ஈடுகடன் பத்திரப்படி தொகை ரூ. 693-2-4-யும் வரப்பற்ற வியாஜ்யம் செய்த ஷை வியாஜ்யமும் 17-9-41உ வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனை உள்ளவர்கள் அன்று பகல் 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம். தவறினல் ஒரு தலைப்பக்ஷமாக தீர்ப்பாகும்.

A. ஸ்ரீனிவாசய்யங்கார், வாதி வக்கீல்.

சிவகெங்கை 28-8-41.



இஷ்யூக்களின் பைசலுக்காக ஸப்ஸ்டிட்யூட்டெட் சம்மன்ஸ்.

[C. P. C. ஆர்டர் 5, விதி 1 & 5ப்படி]

### தட்டோன் டிஸ்டிரிக்ட் கோர்ட்டு

சிவில் ரெகுலர் கிர் 3/1941.

M. மீனுக்ஷி ஆச்சி, ஷையார் ஏஜண்டு ஷண்முகம் செட்டியார் மூலம். } வாதி.

S. T. சொக்கலிங்கம் செட்டியார் } பிரதிவாதி

புதுக்கோட்டை ஸ்டேட் (ராமச்சந்திரபுரம்) மார்த்தாண்டபுரத்திலிருக்கும் பாங்கர், காகப்ப செட்டியார் என்ற S. T. சொக்கலிங்கம் செட்டியாருக்கு நோட்டீஸ்:—

ஷை கிம்பரில், தான் டிக்ளரேஷன் பெறவும், தஸ்தவேஜுகள் எழுதிப் பெறவும், மத்திய கால நஷ்டியுடன் கணக்குத் தீர்த்துப் பெறவும், அல்லது அதற்கு பதிலாக தனக்கு ரூ. 98523-2-9-க்கு டிக்கிரி வழங்கவும் கோரி உங்கள் பேரில் வாதி வியாஜ்ஜியம் செய்து, 22—9—41உ திங்கட்கிழமை யன்று முற்பகல் 10 மணிக்கு நீங்களாவது, உங்கள் பவர் ஏஜண்டாவது அல்லது உங்கள் இன்ஸ்டரக்ஷன் பெற்ற அட்வோகேட் அல்லது ப்ளீடராவது வியாஜ்ஜிய சம்பந்தமான எல்லா விஷயங்களுக்கும் ஜவாப் சொல்ல வாய்தா ஏற்பட்டிருக்கிறது. அது சமயம் ஷை எவரேனும் விசாரணைக்கு ஆஜராகாத பக்ஷத்தில் உங்களை யன்னியில் இஷ்யூக்கள் முடிவு செய்யப்படும்.

உங்கள் தரப்புக்கு ஆதாரமாகவிருக்கும் சாக்ஷியங்களையும் டாகுமெண்டுகளையும் நீராவது உங்கள் அட்வோகேட்டாவது கொண்டு வர வேண்டியது. நீங்கள் எழுத்து மூலம் ஏதாவது ஸ்டேட்மெண்டு தாக்கல் செய்யவிரும்பினுல் அதை வாய்தாத் தேதிக்கு நான்கு நாட்களுக்கு முன்னதாகவே தாக்கல் செய்யவேண்டும்.

இதில் இக்கோர்ட்டாரவர்களின் கையெழுத்தும் முத்திரையும் 13-8-41 இடப்பட்டது.

(Sd) BA BA, உத்தரவுப்படி

Sd:—

சப் ஜட்ஜ், டிஸ்டிரிக்ட் அண்டு செஷன்ஸ் கோர்ட், தட்டோன்.

# யுத்தத்தின் இரண்டாம் வருஷம்

## சென்ற செப்டம்பருக்குப் பிறகு ஏற்பட்ட மாறுதல்கள்

(விக்காம்ஸ்டீட் எழுதியது)

★

போர் ஆரம்பித்து இரண்டு வருஷம் முடியப்போகிறது. போன வருஷத்தில் ஜெர்மன் விமானங்கள் கூட்டங் கூட்டமாக இங்கிலாந்தைத் தாக்க ஆரம்பித்த போது யாரால் இந்தக் கொடுந் தாக்குதலைத் தாங்க முடியும் என்று உலகம் முழுவதுமே பெருமூச்சு விட்டுக் கவலை கொண்டது. பிரான்ஸ் ஏற்கெனவே விழுந்து விட்டது. பிடிபடாமலும் நாசமடையாமலும் பிரிட்டிஷ் படையெடுப்புத் துருப்புகள் டன்கர்க் கிலிருந்து தப்பி விட்ட போதிலும், அவர்களிடமிருந்த கனத்த தளவாடங்கள் எல்லாம் நஷ்டமாயின. ஜெர்மன் துருப்புகள் வடபிரான்ஸின் துறைமுகங்களிலும் கடற்கரையிலும் பிரிட்டனைப் படை எடுக்கத் தயாராய் நின்றன. ஜெர்மன் ஆகாயப்படை பிரிட்டிஷ் ஆகாயப் படையை அழிப்பதற்கு மட்டுமே காத்திருந்தன.

பிரிட்டன் தலைவிதி அவ்வளவு தான் என்று அமெரிக்காவிலும் கண்ணீர் விட ஆரம்பித்து விட்டார்கள் பிரிட்டனுக்கு கஷ்டம் இவ்வளவு என்று ஜெர்மனி விடுக்கும் புள்ளி விவரங்களை எல்லாரும் நம்பினார்கள். ஜெர்மானியர் நஷ்டம் பற்றி பிரிட்டிஷார் கூறுவதை நம்பவேயில்லை. படை எடுப்பு யோசனையைக் கைவிட்டு, பகல் தாக்குதல்களையும் ஜெர்மனி நிறுத்திக் கொண்டு, தன் தோல்வியை ஒப்புக் கொள்ளும் வரை பிரிட்டனின் போரில் பிரிட்டிஷாருக்கு சந்தேகமற்ற ஜெயம் என்று யாரும் நினைக்கவே யில்லை.

பிறகு இன்று வரை பிரிட்டன் படை எடுக்கப்படவில்லை. அதற்குப் பதிலாக இரவும் பகலும் நூற்றுக் கணக்கான பிரிட்டிஷ் விமானங்கள் ஜெர்மன் தொழிற் சாலைகளைத் தாக்கி வருகின்றன. படை எடுப்புக்காக ஜெர்மனி வைத்திருந்த சேனைகளையும், பிரான்ஸ், பெல்ஜியம், ஹாலந்து, நார்வே முதலிய வசப்பட்ட நாடுகளில் வைத்திருந்த சேனைகளையும் இப்போது ரஷ்ய யுத்தத்துக்கு ஜெர்மனி அனுப்ப வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகியிருக்கிறது.

பிரிட்டன், ரஷ்யா முதலிய நேச தேசங்களுக்கு சர்வ உதவியும் செய்ய இன்று அமெரிக்கா முன் வந்து விட்டது. நேச தேசத்தாரை விட அதிகமாகவே ஜெர்மனி கப்பல் நஷ்டம் அடைந்தும் வருகிறது. ஜெர்மன் நீர்மூழ்கிகளின் பயமின்றி பிரிட்டிஷ் பிரதம மந்திரியும் அமெரிக்க ஐக்கிய நாட்டு அதிபதியும் அட்லாண்டிக் சமுத்திரத்தில் எங்கோ ஓரிடத்தில் சந்திக்கவும், யுத்தப் போக்கிற்கும் சமாதானத்திற்குமாய் எட்டுத் தத்துவங்களைக் கலந்து பேசி வெளியிடவும முடிந்திருக்கிறது.

சென்ற யுத்தத்தின் கடைசி வருஷத்தில் 1918 ஜனவரி 8ம் தேதி, பிரஸிடெண்ட் வில்சன் விடுத்த 14- 'பாயிண்டு' பிரகடனத்துடன் இந்தப் பிரகடனத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அப்போது இரண்டுக்கு முள்ள வித்தியாசங்கள் புலனாகும்.

பிரஸிடெண்டு வில்சன் விடுத்த 14 பாயிண்டு பிரகடனம் அவர் அமெரிக்க பிரஸிடெண்ட் என்ற தனி ஹோதாவில் விடுத்தது. அது பிரிட்டிஷாருக்கு விரோதமா யில்லாவிட்டாலும், ஐரோப்பிய நேச தேசங்கள் அதை ஒப்புக்கொள்ளும்படி கட்டாயப்படுத்தும் முறையில் அமெரிக்க யுத்த லட்சியங்களை உருவகப் படுத்துவதற்காக விடுக்கப்பட்டது. 1918-ஜனவரிக்கு முன், மகா யுத்தம் மூன்று வருஷம் ஐந்து மாதம் நடந்தாயிற்று.

இந்தப் பிரகடனத்தைக் கவனிப்போம். இப்போது யுத்தம் தொடங்கி இரண்டு வருஷம் முடிவதற்கு முன்பே பிரிட்டனும் அமெரிக்காவும் கைகோத்துக் கொண்டு தங்கள் யுத்த, சமாதான லட்சியங்களை உருவகம் செய்திருக்கின்றன.

1918ம் வருஷத்தில் புரட்சியின்காரணமாய்க் கட்டுக் குலைந்திருந்த ரஷ்யா இப்போது ஆங்கிலம் பேசும் ஜனநாயக நாடுகளின் பக்கத்தில் உறுதியும் பலமும் வாய்ந்த துணைவனாய் நாஸிக் கொடுமையிலிருந்து உலகத்தை விடுவிக்க வேண்டி நிற்கிறது கூடிய சீக்கிரத்திலே ரஷ்ய-ஆங்கிலோ-அமெரிக்க மகாநாடு ஒன்று, பொது எதிரியை ஒழிப்பதற்கான முயற்சியையும் சப்ளை ஏற்பாடுகளை இணைக்கச் செய்வதற்காகவும் மாஸ்கோவில் கூடப் போகிறது. தீவிரமான, தளராத முயற்சிகளின் பலனால் ஜெர்மன் சேனைகள் ரஷ்யாவுக்குள் வெகுதூரம் புகுந்துவிட்டன. என்றாலும் ரஷ்ய அணிகளின் எதிர்ப்பை இன்னும் அவைகள் முறித்துவிட வில்லை. ஜெர்மன் நஷ்டங்கள் பிரம்மாண்டமானவை.

காயம்பட்ட ஜெர்மானியரை முதலிலே மேற்குப் போலந்திலும் கிழக்கு ஜெர்மனியிலுமுள்ள ஆஸ்பத்திரிகளில் வைத்தார்கள். வெகு சீக்கிரத்தில் அந்த ஆஸ்பத்திரிகள் எல்லாம் நிறைந்து போயின. பல பொது இடங்களிலும் சொந்த இடங்களிலும் ஆஸ்பத்திரிகள் அமைத்தார்கள். அவைகளும் போதவில்லை. இப்போது காயம்பட்ட ஜெர்மனியரை ஜெர்மனியின் மத்தியப் பிரதேசத்துக்கும் மேற்குப் பிரதேசத்துக்கும் கூட அனுப்ப வேண்டித் தான் வந்துவிட்டது. அது மட்டுமா! ரஷ்யர்கள் கையில் பிடிபட்ட ஜெர்மன் கைதிகளை எண்ணத் தரமில்லை. அவர்களை உத்தேசித்து ஒருவிசேஷ சுவிஸ் கோஷ்டியை அனுப்பும்படி ஜெர்மனியே ஜினிவா செஞ்சிலுவைச் சங்கத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறது.

ஜெர்மனி தோற்கத்தான் போகிறது என்று எதிர்பார்ப்பது போல ஜெர்மன் வசமுள்ள நார்வே, பெல்ஜியம், ஹாலந்து, பிரான்ஸ், யூகோஸ்லாவியா, கிரீஸ் முதலிய ஐரோப்பிய நாடுகளில் எல்லாம் கலக்கமும் நாசவேலைகளும் மும்முரமாய் அதிகரித்து வருகின்றன. ருமேனியாவில் கூட, ரஷ்யப் போரில் அடையும் படு நஷ்டங்களாலும் ரஷ்ய விமானத் தாக்குதல்களால் உண்டாகும் சேதத்தாலும், ஜெர்மனியுடன் ஒத்துழைப்பதை எதிர்த்து அதிருப்தி வளர்ந்து வருகிறது.

இப்பேர்ப்பட்ட நிலைமையில், ஜெர்மானியர் பிரிட்டிஷ் ரேடியோவைக் கேட்டால் மரண தண்டனை விதிக்கப்படுவர் என்று கேப்பல்ஸ் பயமுறுத்துவது சகஜமாய் எதிர்பார்க்க வேண்டியதுதானே? 'பிரிட்டிஷ் 'பொய்கள்' என்ற விஷத்தைக் குடித்தாலும் ஒன்றும் செய்யாது என்ற மனோதிடம் அவர்களுக்கு இல்லை என்று கேப்பல்ஸ் ஜெர்மானியரை எச்சரிக்கிறார்.

பாவம், ஜெர்மனிக்குத் தங்கள் தலைவரிடம் நம்பிக்கை போய்விடும் என்று கேப்பல்ஸ் கருதுகிறார். ஆனால் என்ன? எப்படியும் ஜெர்மனி போரில் தோற்கத்தான் போகிறது. ஆகையால் எவ்வளவு சீக்கிரமாக ஜெர்மானியர் தங்கள் தலைவரிடம் நம்பிக்கையை இழக்கிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு குறையும் அவர்கள் தோல்விக்குப் பிறகு படும் அவஸ்தை. இது தான் உண்மை.

இதைத் தான் ரூஸ்வெல்ட்-சர்ச்சில் பிரகடனம் தெளிவாக்குகிறது. இப் பிரகடனத்தின் முக்கியமான பாயிண்ட் ஆறுவதாகும். அதாவது நாஸி கொடுங்கோன்மை முடிவாக அழிந்த பிறகு எல்லா நாட்டினரும் தத்தம் நாடுகளில் பத்திரமாயும் பயமின்றியும், இல்லாமையின்றியும் வாழும்படியாக சமாதானம் ஏற்படச் செய்ய பிரிட்டனும் அமெரிக்காவும் நம்பிக்கை கொண்டிருக்கின்றன என்பதாகும்.

பிரிட்டனும் அமெரிக்காவும் சேர்ந்து ஏற்படுத்த உறுதி கொண்ட சமாதான காலத்தின் நன்மைகளை ஜெர்மன் மக்கள் அனுபவிப்பதை, அவர்கள் தங்கள் நாஸித் தலைவர் ஹிட்லரிடமும் அவர் சகாக்களிடமும் வைத்திருக்கும் நம்பிக்கை ஒன்று தான் தடை செய்கிறது.









# கவியரசரின் ஞாபகார்த்த ஏற்பாடு

## கமிட்டி நியமிக்கப்பட்டது

காலஞ் சென்ற கவிஸ்ரேஸ்டர் ரவீந்திரநாத் டாகூரின் ஞாபகார்த்தமாக சென்ற 30-ந் தேதி கல்கத்தாவில் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. ஸ்ரீமதி ஸரோஜினி தேவி தலைமை வகித்து கவிஞருக்குப் புகழ் மாலை சூட்டினார். எள் விழ இடமில்லாமல் கூட்டமாக இருந்ததாம். டாகூரின் லக்ஷியங்களை விளக்கிப் பேசிவிட்டு காந்திஜியையும் ரவீந்திரரையும் அவர் ஒப்பிட்டுப் பேசுகையில், "புனாவில் மகாத்மா உபவாஸமிருந்து சாகக் கிடந்த பொழுது அவரும் ரவீந்திரரும் தழுவிக் கொண்டதை நான் பார்த்தேன். சத்தியமும், அழகும் ஒன்றையொன்று தழுவுவது போல் எனக்குப் பட்டது. அவை இரண்டும் ஒன்று தான்; அவற்றைப் பிரிக்க முடியாது என்பதை அறிந்தேன்" என்று கூறினார். விஸ்வபாரதியைக் காட்டிலும் ரவீந்திரருக்கு வேறு சிறந்த ஞாபகார்த்தம் இருக்க முடியாதென்றும், அதை இந்தியர் அன்புடன் வளர்க்க வேண்டும் என்றும் அவர் கேட்டுக்கொண்டார்.

பல மாகாணங்களிலிருந்தும் சுமார் 200 பிரபலஸ்தர்கள் கொண்ட ஒரு கமிட்டியை நியமிக்கப் போவதாகக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது. சென்னை மாகாணத்திற்கு மகாகனம் சாஸ்திரியாரும், ஸர் எஸ். ராதாகிருஷ்ணனும் அங்கத்தினராக இருப்பர் என்று தெரிகிறது.

---

# காங்கிரஸ் பதவி ஏற்கவேண்டியதன் நோக்கம்

## ஸ்ரீமான் சத்தியமூர்த்தி அறிக்கை

ஸ்ரீமான் சத்தியமூர்த்தி விடுதலையானதிலிருந்து சில நாட்களாக செய்துவரும் பிரசங்கங்களால் நாட்டில் தப்பபிப்பிராயம் ஏற்பட்டு வருவதையொட்டி பத்திரிகைகளுக்கு ஒரு அறிக்கை விடுத்திருக்கிறார்: அதில், அவர் சத்தியாக்கிரக இயக்கத்தை குறை கூறியோ, அது வெற்றியடையவில்லை யென்பதற்காகவோ, காங்கிரஸ் மறுபடியும் பதவி ஏற்கவேண்டும் என்று சொல்லவில்லை என்றும், பிரிட்டிஷார் உயிருக்கு மன்றாடிக்கொண்டிருக்கும் தற்போதைய நிலையில் சர்க்காருக்கு மேலும் சங்கடம் விளைவிக்க விரும்பவில்லை என்று திட்டமாகக் காந்திஜி சொல்லிவிட்டபடியால், சர்க்கார் சத்தியாக்கிரக இயக்கத்தை நடத்த அனுமதி தரவேண்டும் என்று யோசனை கூறியும், யுத்த சேவையில் அதிகமாக ஈடுபடாமல் நிர்வாகத்தை நடத்த முஸ்லீம் லீக் பிரதம மந்திரிகளுக்கு சர்க்கார் விட்டுக்கொடுத்திருப்பதைக் கொண்டும், மூக்கியமாக வகுப்புஒற்றுமையும், உள்நாட்டில் ஒழுங்கான நிலைமையை ஏற்படுத்துவதற்காகவும் தற்போது காங்கிரஸ் மந்திரிப் பதவியை ஏற்கவேண்டும் என்பதே தன்கருத்து என்று கூறியிருக்கிறார்.

---

# ஜெர்மனியின் படை பலம்

## பிரிட்டிஷ் அறிக்கை

பிரிட்டிஷ் தூதரான ஸர் நாச்புல் ஹ்யூஜன் துருக்கியின் ஜனாதிபதி இனோனுவிடம் பிரிட்டிஷ் யுத்த முயற்சியைப்பற்றிய அறிக்கை ஒன்றைக் கொடுத்தபோது தெரிவித்ததாவது:—

ஜெர்மன் படை பலம் 70 லக்ஷம் போர் வீரர். இதில் சுமார் 50 லக்ஷம் பேர் (171 டிவிஷன்கள்) ரஷ்ய முனையில் போர் புரிகின்றனர். ஜெர்மன் டாங்குப் படையில் 90 சதம், அதாவது 7500 டாங்குகள் ரஷ்யப் போரில் ஈடுபட்டுள்ளன. இது வரை ரஷ்யப் போரில் 10 லக்ஷம் பேரை நாஸிகள் இழந்திருக்கின்றனர்.



# பொதுமக்களுக்கு அறிவிப்பு

காரைக்குடி நகர சத்தியாக்கிரகக் கமிட்டிக் காரியதரிசி பழ. வெங்கடாசலம் செட்டியாரவர்களின் அறிக்கை:

"குறிப்பிட்ட 22-8-41-ந் தேதி காலை 10 மணிக்குக் காரைக்குடி முனிசிபலாபீஸில் முனிசிபல் காங்கிரஸ் கட்சிக் கூட்டம் கூடியது. அந்தக் கூட்டத்திற்கு மாகாணக் கமிட்டிக் காரியதரிசியும், ஜில்லாக் கமிட்டிக் காரியதரிசியும் 15 கௌன்சிலர்களும் வந்திருந்தார்கள். நானும் போயிருந்தேன். கட்சியின் உபதலைவர் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். முதலாவதாகக் கட்சிக் காரியதரிசியால், வந்த கடிதங்களும், பதில் கடிதங்களும் படிக்கப்பெற்றன. கட்சிக் காரியதரிசி அதிகார வரம்பு மீறி எழுதிய கடிதத்தைப் பற்றி விவாதிக்கப்பெற்றது. அதற்குக் கட்சிக் காரியதரிசியால் பலவாறாக சமாதானம் சொல்லப்பட்டும் கட்சி திருப்தியடையவில்லை. மாகாணக் கமிட்டிக் காரியதரிசியின் விருப்பத்திற்கிணங்க எச்சரிக்கை செய்யப்பட்டு ஷை விஷயத்தை ஒருவாறாக முடிவு செய்து ரிக்கார்டு செய்யப்பட்டது.

அதன்பின் அஜண்டாவில் குறிப்பிடப் பட்ட விஷயம் எடுத்துக்கொள்ளப் பெற்றது. மாகாணக் கமிட்டித் தலைவரிடமிருந்து திரு. ஆர். ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரை சேர்மனாகத் தெரிந்தெடுக்கும்படி அறிவிக்கப்பட்டிருக்கிறதாகக் கட்சிக் காரியதரிசி படித்தார். மாகாணக் கமிட்டித் தலைவருக்கு இது சம்பந்தமான விஷயங்கள் போதுமான சாவகாசத்துடன் முன்னரே அறிவிக்கப் பட்டிருந்தும் எவ்வித பதிலுமில்லாமல் தற்சமயம் இன்னாரையே தேர்ந்தெடுக்க வேண்டுமென்று எழுதியிருப்பது ஆச்சரியமாயிருக்கிறதென்றும், கட்சியின் பெரும்பான்மை அங்கத்தினர்களின் அபிப்பிராயப்படி முடிவு செய்யவேண்டுவதே சட்டமும், நியாயமுமாகுமென்றும் கட்சியினரில் பலரால் விவாதம் கிளப்பப்பட்டது. மாகாண ஜில்லாக் கமிட்டிக் காரியதரிசிகள் வேறொன்றையும் விவாதிக்காமலேயே தமிழ்நாடு காங்கிரஸ்க் கமிட்டித் தலைவரின் கட்டளையை-அது சரியோ தப்போ-அப்படியே நிறைவேற்ற வேண்டு மென்று சொன்னார்கள். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர், கட்சியைச் சிறிதும் மதிக்காமல் எழுதியுள்ள கடிதம் நியாயப்படியும், சட்டப்படியும் ஒப்புக் கொள்ளத்தக்க தல்லவென்று கட்சியினரில் பெரும்பான்மையோரால் கருதப்பட்டது.

இந்நிலையில் (1) இக்கூட்டத்தை ஒத்தி வைத்து யோசித்து முடிவு செய்வது நல்லதென்றும், (2) திரு. சா. கணேசன் சத்தியாக்கிரகம் செய்து சிறையிலிருப்பதால் அவரை சேர்மனாக தேர்ந்தெடுப்பது மிகவும் பெருமையாக இருக்குமென்றும் காரியதரிசிகளிடம் நான் தெரிவித்தேன். அவர்கள் ஒரே பிடிவாதமாக மாகாணக் கமிட்டித் தலைவர் குறிப்பிட்டு எழுதியுள்ளவரையே தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும் வேறு ஆலோசனைகளுக்கே இடமில்லையென்றும் சொல்லிவிட்டார்கள். அப்பால் திரு. ஆர். ஆ. ராம. சொ. வை சேர்மன் பதவிக்கு கட்சிக்காரியதரிசி பிரேரேபித்தார்; அதை திரு. பார்த்தசாரதி ஐயங்கார் ஆமோதித்தார். திரு சி. முரு. நாராயணன் செட்டியார் பெயரும் சேர்மன் பதவிக்கு பிரேரேபித்து ஆமோதிக்கப்பெற்றன. அப்பொழுது ஸ்தல ஸ்தாபன காங்கிரஸ் கட்சி விதி 22 ன்படி திரு ஆர். ஆ. ராம. சொ. வைத் தான் சேர்மனாகத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று காரியதரிசிகளால் வற்புறுத்தப்பட்டது. ஷை 22வது விதிக்கு தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் எழுதிய கடிதம் முரணானதென்றும் விதி 11ன்படி கட்சியின் பெரும்பான்மை அங்கத்தினர்கட்கே எல்லா விஷயங்களிலும் முடிவு செய்யும் உரிமை உண்டு என்றும், இந்த விதி ஏற்பட்ட பின் நடைமுறையில் கட்சியின் பெரும்பான்மை அபிப்பிராயத்திற்கு விரோதமாக ஒரு இடத்திலும் நடைபெற வில்லையென்றும் எடுத்துக் காட்டப்பெற்றது. இதை ஒப்புக்கொள்ளாமல் திரு. ஆர். ஆ. ராம. சொ., அவரைப் பிரேரேபித்தவர், ஆமோதித்தவர், மற்றொரு அங்கத்தினர், ஆக நால்வரும் வெளியேறி விட்டனர். பிறகு திரு. ஆர். ஆ. ராம. சொ. வின் பெயர் முறைப்படி ஓட்டுக்கு விடப்பட்டது. அவருக்கு யாரும் ஓட்டுச் செய்யவில்லை. திரு. சி. முரு. நா. வுக்கு பாக்கியிருந்த 11 பெயர்களும் வாக்களிக்க அவர் சேர்மனாக தேர்ந்தெடுக்கப்பெற்றார். மாகாண ஜில்லாக் கமிட்டிக் காரியதரிசிகள் கூட்டம் முடியும் வரை இருந்து நடவடிக்கைகளைக் கவனித்தனர். இவைகள் தான் காங்கிரஸ் முனிசிபல் கட்சிக் கூட்டத்தில் நடந்த உண்மையான விஷயங்கள்.

அறிக்கை பழைய கதைகளுடன் நீண்டு விளங்குவதால் சமீபத்தில் நடந்த கட்சிக் கூட்டத்திலிருந்து வெளியிடப்பட்டிருக்கிறது. (ப—ர்.)

ஷை சம்பவத்தை யொட்டி காரைக்குடி முனிஸிபல் கவுன்சிலரும் நகரசபை சத்தியாக்கிரகக் கமிட்டித் தலைவருமான ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் அறிவிப்பதாவது:—

காரைக்குடி நகர சத்தியாக்கிரக கமிட்டி காரியதரிசி பீனா. மெ. மெ. பழ. வெங்கிடாசலம் செட்டியார் முனிசிபல் காங்கிரஸ் பார்ட்டியில் நடந்த சேர்மென் எலெக்ஷன் தேர்தலில் என் பெயரை குறிப்பிட்டு தவறாக எழுதியிருக்கிறார். நான் சேர்மென் தேர்தலுக்கு யாரிடமும் ஓட்டு போடும்படி சொல்லி கெஞ்சவுமில்லை, நான் விரும்பவுமில்லை என்பதை பொது ஜனங்களுக்கு தெரிவித்துக் கொள்ளுகிறேன்.







# பொதுக் கணக்குக் கமிட்டி

## ரயில்வே தந்தி வருமானங்கள்

இப்போது நடந்துவரும் சர்க்கார் பொதுக் கணக்குக் கமிட்டி, தந்தி தபால் இலாகா சம்பந்தமாக 1939—40ல் ரூபாய் 89,59,000 லாபம் கிடைத்திருப்பதாகவும், இவ் வருஷம் சுமார் 1,25,00,000 லாபம் கிடைக்கும் என்பதாகவும் தெரிவிக்கிறது. ரயில்வேக் கணக்கில் ஏற்பட்ட 18½ கோடி ரூபாய் உபரி வருமானத்தில் 12 கோடி பொது வருமானத்திலும், பாக்கி ரயில்வே ரிசர்விலும் சேர்த்துக்கொள்ளப் படும். சென்ற வருஷம் 4⅓ கோடி ரூபாய் உபரி வருமானம் கிடைத்தது.

ஆகஸ்டு மாதம் 20-உயோடு முடிவாகிய வாரத்தில் தென்னிந்திய ரயில்வேயின் மொத்த வருஷ வருமானம் ரூ19,55,254. சென்ற வருஷ இறுதியில் வருமானம் ரூ 15,14,910.

1939—40ல் டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்தவர்கள் 23,00,000 பேர்கள்.

குமரன்

காரைக்குடி

விஷு-ஸ்ரீ ஆவணி-மீ 19-உ

## மூன்றும் ஆண்டு

தற்போது நடைபெற்று வருகிற யுத்தத்தின் மூன்றுவதாண்டு பிறந்த நாள் நேற்று வெற்றிக் கொண்டாட்டமாகக் கொண்டாடப்பட்டது. யுத்தம் தொடங்கி இரண்டு ஆண்டுகள் முடிந்து விட்டன. ஈராண்டுகட்கு முன்பு சுதந்திரத்துடன் ஆண்டனுபவித்துக் கொண்டிருந்த பல்வேறு தேசமக்கள் சிறையிலடைபட்டும் நாட்டை விட்டு, வெளியேற்றப்பட்டும், இறந்துபட்டும், சின்னா பின்னப் பட்டுவிட்டனர். போலண்டு, பிரான்ஸ், பெல்ஜியம், ஹாலந்து, யுகோஸ்லாவியா, நார்வே, கிரீஸ், ரஷ்யா இங்கிலாந்து போன்ற தேசங்கள் ஜெர்மனி, இடாலி ஆகிய தேசத்தினரால் சிதைவுண்டு துக்கக் கடலில் துடித்துக்கொண்டிருக்கின்றன. ஆனால் அந்த ஜெர்மனியும், இடாலியும் வாரி யெடுத்தது தானென்ன? லட்சக்கணக்கான வீர மக்களை யமனுலகுக் கனுப்பியதும், எதிரியிடம் சிறை வாழ்வுக்கனுப்பியதும், காலொடிந்து கையற்றுக் கண் கெட்டுப்போகும்படி பல்லாயிரம் மக்களைப் பாடுபடுத்தி வைத்திருப்பதுமே யன்ஞே? ஐரோப்பாவில் ஓரிடத்தில் வைத்த தீயை விறகிட்டு ஊதி வளர்த்து உலகம் முழுதையுமே எரித்துச் சுடுகாடாக்க முயன்று வருகின்றனர். பெற்றோரை இழந்த பிள்ளைகள், பிள்ளைகளை இழந்த பெற்றோர்; மனையின்றி மாடின்றி மக்களையின்றித் தவிக்கும் குடும்பங்களை எண்ண முடியுமா? போர் நடக்கும் தேசங்களில் சாவில்லாத மனையுண்டா? லட்ச லட்சமாகப் போர்க் களத்தில் மாண்டு மடிந்து கொண்டிருக்கின்றனர். ரத்த வெள்ளம் பாய்ந்து ஓடுகிறது. ரஷ்யப் போர் முனையில் மட்டும் சாதாரணமான கணக்குப்படி பார்த்தாலுங்கூட இருபது லட்சம் உயிர் பலியாகியிருக்கிறதென்று தெரிகிறது. இத்தனை பிணங்களின் தலை கைகால் உடல்—இவற்றின் குவியல்கள் 1500 மைல் நீளத்தில் கிடந்து நாறுகிறது. இந்த யுத்தப் பிரதேசத்தில் பேய் தானே வாசஞ் செய்ய முடியும்?

ஜப்பானியரும் சீனரும் சண்டையிட்டு மடிந்துகொண்டிருக்கின்றனர். அபிஸீனியர் பலியும் யுத்த தேவதைக்கு விருந்தாகி யிருக்கிறது. ஸ்பெயின் தேசத்திலேற்பட்ட புரட்சியில் அங்கு எண்ணற்ற மக்கள் மாண்டொழிந்தனர். இனி மிஞ்சியிருப்பது அமெரிக்கா கண்டம் ஒன்றுதானென்னலாம். அதுவும் இந்த மூன்றுவதாண்டில் மாட்டிக் கொள்ளும்படியான நிலைமை ஏற்பட்டு வருகிறது. சென்ற மகா யுத்தத்தில் சில நாடுகளாவது நடுநிலைமை வகித்து மிஞ்சியிருந்தன. இப்பொழுது எந்த நாடும் மிஞ்சப் போவதில்லை யென்று தெரிகிறது.

ஆசியாவிலும் யுத்த மேகம் சஞ்சரிக்க ஆரம்பித்துவிட்டது. ஜப்பான் உருமல் அடங்கவில்லை. இருந்தாலும் பிரிட்டனும் அமெரிக்காவும் சேர்ந்து செய்யும் கூட்டு ஏற்பாடு நாளுக்கு நாள் உரம் பெற்று வருகிறது. ஜெர்மனி கைப்பற்றிய நாடுகளுக்குள் 'வி' இயக்கம் தலை தூக்குவதாகச் செய்திகள் வருகின்றன. சிரியா, இராக், இரானபோன்ற ஆசியா தேசங்களில் பிரிட்டன் எடுத்துக்கொண்ட விரைந்த நடவடிக்கை பெரும் பயனை அளித்திருக்கிறது. பிரிட்டன் யுத்த ஆரம்பத்திலிருந்த மாதிரியான பலவீன நிலைமை அடியோடு மாறி, இன்று போருக்கு சர்வ ஆயத்தமாக இருப்பதாக சர்ச்சில் கர்ஜிக்கிறார். யுத்த ஆரம்ப காலத்துக்கு இரண்டாவதாண்டின் ஆரம்ப நாள் மிகுந்த நம்பிக்கையைத் தரவில்லை. ஆனால் அச்சு நாடுகட்குக் கஷ்டத்தையும் அளவிட முடியாததும் எதிர் பாராததுமான நஷ்டத்தையும் கொடுத்துக் கொண்டிருக்கும் சந்தர்ப்பத்தில் மூன்றுவது ஆண்டின் பிறப்பு நாள் தோன்றுகிறது.

இப்பொழுது நடைபெறும் இந்த யுத்தமே உலகின் கடைசி யுத்தமாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறோம். "பொரு தொழிலும் கடை நிலத்திற் கிடந்ததே என மொழிந்தான் புகழே பூண்பான்". இப்படிக் கூறப்பட்ட யுத்தமானது உலகை விட்டு ஒழியும்படியானதொரு சமாதான வாழ்வு உலகில் ஏற்படுமா? ஏன் ஏற்படக்கூடாது? யுத்தத்தில் துன்பப்பட்டுச் சலிப்படைந்த நாட்டு மக்கட்கு இந்த எண்ணம் வரக்கூடாதா? வரலாம்.

### காரைக்குடி நகரசபை

மேற்படி சபையின் விசேஷக் கூட்டம் ஒன்று நாளை 5ந் தேதி வெள்ளிக்கிழமை சாந்தி மாளிகையில் நடைபெறும். அப்போது நகரசபைக்கு ஓர் உபதலைவர் தேர்ந்தெடுப்பது சம்பந்தமானவிஷயம் ஆலோசிக்கப்படும்.

### செட்டியார்கள் நல உரிமைச் சங்கம் காரைக்குடி

28-8-41 மாலை 6-30 மணிக்கு ஏழாவது ஆண்டு முதலாவது மகா சபைக் கூட்டம் ஸ்ரீ மெ. செ. அ. மெ. பழநியப்ப செட்டியார் தலைமையில் நடைபெற்றது. 7வது ஆண்டிற்கு ஸ்ரீ ஆரு. பழ. சி. ப. மாணிக்கம் செட்டியார் தலைவராகவும் ஸ்ரீ குப. சு. அ. மெ. சொக்கலிங்கம் செட்டியார் உபதலைவராகவும் ஸ்ரீ ஆ மு. ஆரு. (பாசியன்) பழநியப்ப செட்டியார் காரியதரிசியாகவும், ஸ்ரீ ராம. ப. தெ. ப. ராம. பழநியப்ப செட்டியார் உதவிக் காரியதரிசியாகவும் 11 நிர்வாக சபை அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார்கள்.

### விவாஹம்

பள்ளத்தூர் திவான்பகதூர் அ. மு. முருகப்ப செட்டியார் அவர்கள் பௌத்திரியும் அ. மு. மு. முருகப்ப செட்டியார் அவர்கள் புத்திரியுமான வள்ளியம்மைக்கும் கோட்டையூர் பெ. மு. அ. லெ. அழகப்ப செட்டியார் அவர்கள் புத்திரன் திருவளர் செல்வன் லெட்சுமணனுக்கும் திருமணம் மிகச் சிறப்பாக ஆவணி 12உ வியாழக்கிழமையன்று பள்ளத்தூரில் நடைபெற்றது. செட்டிநாட்டின் முக்கியமான பிரமுகர்கள் பெரும்பாலாக யாவரும் விஜயம் செய்திருந்தனர்.

### புதுமை

காரைக்குடி திருவாளர் சா. கா. அ. அள. சித. சிதம்பரம் செட்டியாரவர்கள் குமாரன் திருவளர் செல்வன் அழகப்பனுக்கு காப்புக்கட்டுப் புதுமை விஷு-ஸ்ரீ ஆவணி மீ 15உ மிகச் சிறப்பாக நடைபெற்ற அன்று இரவு 9 மணி முதல் சென்னை ஸ்ரீமதி பாலசரஸ்வதியின் அபிநயக் கச்சேரி நடைபெற்றது.

### இன்னிசைக் கச்சேரி

கோட்டையூர் திருவாளர் அ. க. அ. சித. அள. சிதம்பரம் செட்டியார் அவர்கள் வீட்டில் ஆவணி 15உ நடைபெற்ற திருமணத்தை ஒட்டி அன்று மாலை 4 மணி முதல் கோகிலகான ஸ்ரீமதி M. S. சுப்புலக்ஷிமியின் பாட்டுக்கச்சேரி நடைபெற்றது. ஏராளமான கூட்டம்.

### உண்ணுவிரத நிறுத்தம்

காந்திஜி கட்டளைக்குப் பணிந்து நாகபுரி சிறையில் 290 'ஸி' வகுப்பு ராஜீயக் கைதிகள் உண்ணுவிரதத்தை நிறுத்திவிட்டனர். தங்களுக்குப் பால் கொடுக்கப்படவில்லை என்பதற்காக மேற்படி சத்தியாக்கிரஹிகள் உபவாசம் இருந்ததாகத் தெரிகிறது.

## சத்தியாக்கிரகச் செய்திகள்

### பீஹார் மாஜி மந்திரிகள் விடுதலை

பீஹார் மாஜி பிரதம மந்திரி ஸ்ரீ கிருஷ்ணசின்ஹாவும், மாஜி பொக்கிஷ மந்திரி அனுக்ராஹ நாராயண சின்ஹாவும் 27-ந் தேதி காலை ஹஸாரிபாக் மத்திய சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டனர். ஸ்ரீ கிருஷ்ண சின்ஹா சமீபத்தில் மறுபடியும் சத்தியாக்கிரகம் செய்வார் எனத் தெரிகிறது

### அழ. விஸ்வநாதனுக்கு 6 மாதம்

தனவைசிய இளைஞரும், காங்கிரஸ் வாதியுமான நெற்குப்பை ஸ்ரீ அழ. விஸ்வநாதன் அவர்கள் சென்னை தியாகராய நகரில் இரண்டாவது முறையாகச் சத்தியாக்கிரஹம் செய்து கைது செய்யப்பட்டு 6 மாத கடுங்காவல் தண்டனை யடைந்தார்.

இவர் 31-3-41ல் நெற்குப்பையில் முதலாவதாக சத்தியாக்கிரஹம் செய்து கைது செய்யப்படாமல் கால் நடையாக டெல்லி நோக்கிப் புறப்பட்டு 390 மைல்கள் நடந்து 217 கிராமங்களில் பிரசாரம் செய்துகொண்டு சென்னையில் 23-5-41ல் சத்தியாக்கிரகம் செய்து இரண்டு மாதக் கடுங்காவல் தண்டனை யனுபவித்தவர். 1936ல் லக்ஷ்மணபுரியில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் மகாநாட்டிற்குத் தமிழ் நாட்டிலிருந்து (3600) மூவாயிரத்து அறுநூறு மைல் தூரம் கால்நடையாகச் சென்று தொண்டாகச் சேவை அத்தாட்சியும் பெற்றவர்.

### சென்னை மாகாண சத்தியாக்கிரகிகள் மொத்தம் 3400

#### சிறையிலுள்ளவர் 1200

சென்னை மாகாணத்தில் மொத்தம் 3,400 பேர் சத்தியாக்கிரகம் செய்து தண்டிக்கப்பட்டிருக்கின்றனர். இவர்களில் தற்போது 1,200 பேர் சிறையிலிருக்கின்றனர். பாதுகாப்பில் வைக்கப்பட்டிருப்பவர்கள் 160 பேர்கள்.

### ஸ்ரீ கே. டி. பாஷ்யம் விடுதலை

பெங்களூர் பருத்தி, பட்டு ஆலைகள் வேலை நிறுத்தம் சம்பந்தமாகக் கைது செய்யப்பட்ட பெங்களூர் நெசவுத் தொழிலாளர் சங்கத் தலைவர் ஸ்ரீ கே. டி. பாஷ்யம் ஆகஸ்டு 30ந் தேதி விடுதலை செய்யப்பட்டார். வேலை நிறுத்தம் நின்று விட்டதே அவர் விடுதலைக்குக் காரணம்.

### 4 லக்ஷம் ஜெர்மன் குழந்தைகள் செக்கோஸ்லாவேகியாவுக்கு வெளியேற்றப்பட்டனர்

மத்திய, மேற்குச் ஜெர்மன் பிரதேசங்களிலிருந்து சுமார் 4 லக்ஷம் ஜெர்மன் குழந்தைகள் செக்கோஸ்லாவேகியாவுக்கு மாற்றப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இக்குழந்தைகள் எல்லாம் பணக்காரர் வீட்டுக் குழந்தைகளாம்.

### பாங்கு மானேஜருக்குக் கடுங்காவல்

கல்கத்தாவிலுள்ள பரோடா பாங்கு மானேஜர் மிஸ்டர் எம். பி. அமீனும் அந்த பாங்கில் கணக்கு வைத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீ எஸ். என். மித்தரும் வேறொருவர் டிபாஸிட்டாக வைத்திருந்த சுமார் 7,700,000 ரூபாய் விஷயமாக நம்பிக்கைத் துரோகம் செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்கள். இப்போது இவர்கள் ஜாமீனில் விடுவிக்கப்பட்டிருக்கின்றனர்.

### யுத்தத்துக்கு வேண்டிய ஜவுளிகள்

யுத்தத் தேவைக்கான நெசவுச் சரக்குகளைப் போதிய அளவுக்குச் சப்ளை செய்வது சம்பந்தமாக விவாதிப்பதற்கு இந்திய சர்க்கார் ஆலை முதலாளிகளின் மகாநாடு ஒன்றை செப்டம்பர் 8-ந் தேதி பம்பாயில் கூட்டுவர். உற்பத்தியைத் துரிதப்படுத்துதல், நியமன வேலைக்குக் கிடைப்பதில் உத்தரவாதம் முதலியவைகள் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும். அப்போது நூல் விலை கட்டுப்பாடு சம்பந்தமான பிரச்னைகளும் கவனிக்கப்படும்.

## முனிசிபல் கமிஷனர் மகாநாடு

### மதுரையில் கூட்டம்

மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களின் மேஜர் முனிஸிபாலிட்டிகளின் கமிஷனர்கள் இரண்டாவது மகாநாடு 25-ந் தேதி முதல் மூன்று நாட்களுக்கு மதுரை முனிசிபல் கவுன்ஸில் ஹாலில் சென்னை ஸ்தல ஸ்தாபன இன்ஸ்பெக்டர் ஸ்ரீ கே. ராமுன்னி மேனன் தலைமையில் நடைபெற்றது. 15 கமிஷனர்களில் 14 பேர் விஜயம் செய்திருந்தனர்.

மகாநாட்டை ஆரம்பித்து வைத்த ஸ்ரீ ராமுன்னி மேனன் பல முக்கியமான விஷயங்களைப்பற்றி விரிவாகப் பேசினர். பல கமிஷனர்கள் தத்தம் சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவுப்படுத்திக் கொண்டனர். மதுரை முனிசிபல் கமிஷனர் ஸ்ரீ வி. ஓ. கூரி, ஐ. ஸி. எஸ். கமிஷனர்களது வெளி வேலையும்; முனிசிபல் செல்வத்தைை எவ்வாறு பொதுஜன க்ஷேமத்திற்கு உகந்ததாகச் செலவு செய்வது என்பதுபற்றியும் [illegible] பேசினர். மகாநாட்டில் சுமார் 50 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### பந்தை தேடச் சென்ற சிறுவன் பாம்பு கடித்து மாண்டான்

பெங்களூரில் பிரபல சப் ஜட்ஜ் ஸ்ரீ பி. ஜி. ராமகிருஷ்ண அய்யங்காரின் குமாரனை ரங்கநாதன் என்னும் 10-வயது சிறுவன் மற்றவர்களுடன் கிரிக்கட் விளையாடிக்கொண்டிருக்கையில் பந்தைப் பிடிக்க ஓடும் போது, பாம்புப் புற்றுக்கு அருகே பந்து விழுந்துவிட, அங்கு பதுங்கிக்கிடந்த பாம்பு ஒன்று அவனைத் தீண்டியது. பையன் உடனே வீட்டுக்குச் சென்று பாம்பு கடித்துவிட்டதாகச் சொன்னான். டாக்டர்களும் மற்றவர்களும் எவ்வளவோ சிகிச்சை செய்தும் பயனில்லை. சிறுவன் இறந்தான்.

### புத்தராகப் பிறப்பேன்!

ரங்கூனில் 22 வயது பொங்கி ஒருவர் அடுத்த ஜன்மத்தில் புத்தராகப் பிறக்க வேண்டும் என்ற அவா மேலீட்டினால் ஒரு நாள் இரவு அங்கேயுள்ள புத்தர் கோவிலுக்குச் சென்று ஒருவருமில்லாத போது தன் பேரில் மண்ணெண்ணெயை ஊற்றித் தீ வைத்துக்கொண்டார். அவரது உடல் மிகவும் தசிப்புண்டு போயிற்று. ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வரப்பட்ட சற்று நேரத்திற்கெல்லாம் அவர் இறந்து போனார்.

### மலேயாவில் நடந்த கலவரம்

சமீபத்தில் மலேயாவில் ஏற்பட்ட கலவர சம்பந்தமான விஷயங்களை விசாரணை செய்ய நீதிபதிகள் அடங்கிய ஒரு கமிட்டி நியமிப்பதற்கு கொஞ்சகாலம் பிடிக்கும் என்றும், இந்திய சர்க்கார் இது விஷயமாக மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டிருந்தும், குடியேற்றக் காரியாலயத்தினர், மலேயா அதிகாரிகள் இவர்களது சம்மதத்தைப் பெறுவதில் தான் தாமதம் ஏற்படுவதாகவும் கருதப்படுகிறது.

### காந்திஜியின் கட்டுரைகள்

#### இரு பத்திரிகைகளில் வெளிவரும்

காந்திஜியின் கட்டுரைகள் ஏற்கெனவே 'காதி ஜகத்' என்ற பத்திரிகையில் பிரசுரமாகி வருகிறது. இனிமேல் லக்ஷமணபுரியில் பிரசுரமாகும் 'ஹிந்துஸ்தான்' என்ற தேசிய வாரப்பத்திரிகையிலும் வெளிவரும் எனத் தெரிகிறது.

### தேவஸ்தான நிர்வாகத் தகராறு

#### கருடசேவை வைபவம் நின்றது

ஸ்ரீ வைகுண்டத்தின் கிழக்குப் புறமுள்ள ஸ்ரீ வரகுணமங்கை (நத்தம்) கோயிலில் தேவஸ்தானம் நிர்வாகிகளுக்குள் ஏற்பட்ட தகராறின் காரணமாக 27-ந் தேதி நடக்கவேண்டிய கருடசேவை வைபவம் நின்றுபோனதாகத் தெரிகிறது. இது விஷயமாய் தேவஸ்தான போர்டு இன்ஸ்பெக்டருக்குத் தகவல் அறிவிக்கப்பட்டிருக்கிறதாம்.



## வி—கொண்டாட்டம் காரைக்குடி

யுத்தத்தின் 2-வது ஆண்டுவிழா வெற்றிக் கொண்டாட்டம் இவ்வூரில் நேற்று (3—9—41) நடந்தது. அலங்கரிக்கப்பட்ட யானையின் மேல் மன்னரின் உருவப் படம், மேள வாத்தியங்களுடன் ஊர்வலமாக வந்தது. பல பிரமுகர்கள் கலந்துகொண்டனர். S. M. S. ஹைஸ்கூலில் திரு. S. M. AR. நாராயணன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் திருவாளர்களான A. V. லெக்ஷ்மணன் செட்டியார், M. R. M. பெரியணன் செட்டியார், ஹெட்மாஸ்டர் A. ராமானுஜய்யங்கார், முதலியோர் பேசினர். முனிஸிபல் கமிஷனர் திரு. A. கோபாலகிருஷ்ணன் மே. த. வைஸ்ராயினுடைய ரேடியோப் பேச்சை தமிழில் மொழிபெயர்த்துப் பேசினர். தலைவர் முடிவுரைக்குப் பின் கூட்டம் கலைந்தது.

### விவேகானந்தர் கல்விக்கழகம் ஆவினிப்பட்டி

இக்கழகத்தின் 15ம் ஆண்டு இரண்டாம் மாதக் கூட்டம் 28-8-41ல் மிதிலைப்பட்டி தமிழ் அறிஞர் திருவாளர் V. கமலேஸ்வர அய்யரவர்கள் தலைமையில் நிகழ்ந்தது. அவ்வமயம் கழக மாணவ மாணவிகள் பேசினர்கள். தலைவரவர்கள் முடிவுரைக்குப் பின் வந்தனோபசாரத்துடன் கூட்டம் நிறைவெய்தியது.

20-8-41ல் சிறுகூடல்பட்டி திருவாளர் அள. குப்பான் செட்டியாரவர்கள் தலைமையில் கவி ரவீந்தராத் தாகூர் அவர்களின் பிரிவாற்றுமைக்கு ஓர் அனுதாபக் கூட்டம் நிகழ்ந்தது.

### போலீஸ் உளவாளியை அடைத்து வைத்ததாக

சுபாஷ் பாபுவின் தமயனான ஸ்ரீ சதீஷ் சந்திர போஸும் அவர் குமாரரான ஸ்ரீ தீரேந்திர போஸும் அலிப்பூர் (கல்கத்தா) அடிஷனல் ஜில்லா மாஜிஸ்திரேட்டால் செப்டம்பர் 1ந் தேதி எச்சரிக்கையுடன் விடுவிக்கப்பட்டார்கள். போலீஸ் உளவாளியை அடைத்து வைத்தனர் என்று இவர்கள் மேல் குற்றம் சாட்டப்பட்டது.

### பெங்களூரில் மகாநாடுகள்

ஸெப்டம்பர் 23ந்தேதி முதல் 26ந்தேதி வரை பெங்களூரில் திவான் பஹதூர் ஸர். ஏ. ராமஸாமி முதலியார் தலைமையில் நான்கு மகாநாடுகள் நடைபெறும். 23ந் தேதி விஞ்ஞான கைத்தொழில் ஆராய்ச்சி போர்டு கூட்டமும், 24ந்தேதி மகாநாடும், 25ந் தேதி கைத்தொழில் ஆராய்ச்சி பலன் கமிட்டியும், 26ந் தேதி ஏற்றுமதி ஆலோசனை சபைக் கூட்டமும் நடைபெறும்.

### இரான் சமாதான நிபந்தனைகள்

இரான் சர்காருக்கும், பிரிட்டிஷ் ரஷ்ய சர்க்காருக்கும் ஏற்படவிருக்கும் சமாதான உடன்படிக்கையில் கீழ்க்கண்ட பிரிவுகள் இருப்பதாக ஒரு அமெரிக்க ரேடியோ நிருபர் அறிவிக்கிறார்:

(1) டெஹ்ரானைத் தவிர (இரான் தலைநகரம்) மற்ற கேந்திரஸ்தானங்களைப் பிரிட்டிஷ், ரஷ்யப் படைகள் ஆக்கிரமித்துக் கொள்ளும். (2) இரான் பிரதேச உரிமைகளுக்கும் சுதந்திரத்துக்கும் எத்தகைய தீங்கும் நேராமல் பார்த்துக் கொள்வதாக பிரிட்டனும் ரஷ்யாவும் உறுதி கூறும். (3) கூடிய சீக்கிரத்தில் அவ்விரு நாடுகளும் தங்களுடைய படைகளைத் திரும்ப அழைத்துக் கொள்ளும், (4) பிரிட்டிஷ் ரஷ்யத் துருப்புகளால் இரானியருக்கு ஏற்பட்ட சொத்துச் சேதத்துக்கும், உயிர்ச் சேதத்துக்கும் நஷ்ட ஈடு கொடுக்கும். (5) அரசியல் அதிகாரம் முழுவதும் இரானிடமே இருக்கும். இரான் உள்நாட்டு விவகாரங்களில் பிரிட்டனும், ரஷ்யாவும் தலையிடமாட்டா.

காந்திஜியின் 73 ஜன்ம தினத்தன்று அவருக்கு 73 லக்ஷம் கெஜம் நூலை சமர்ப்பிக்க நாகபுரியில் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

## யுத்தச் செய்திகள்

லெனின்கிராட் சென்ற வாரத்தில் கடுமையாகத் தாக்கப்பட்டது. லெனின்கிராட்—மாஸ்கோ ரெயில் பாதையை துண்டாக்கிவிட்டதாக ஜெர்மன் அறிக்கை கூறுகிறது. ஆனால் இது லண்டனில் மறுக்கப்பட்டிருக்கிறது. ரஷ்யர்கள் இந்த நகரத்தை வெகு பத்திரமாகவே எதிர்த்துக் காப்பாற்றிவருகிறார்கள் எனத் தெரிகிறது. இப்போது அங்கு ஏராளமாக மழை பெய்து கொண்டிருக்கிறது. இப்பிரதேசத்தில் ஏரிகளும், காடுகளும், சதுப்பு நிலங்களும் அதிகமாக இருப்பதால் நாஜிகள் போக்குவரத்துக்கு ரொம்பக் கஷ்டப்படுகிறார்களாம். லெனின்கிராட் பகுதியின் சில இடங்களில் ரஷ்யர் முன்னேறித் தாக்குவதாகவும் சமீபத்தில் வந்த செய்தி கூறுகிறது.

யுக்ரேனில் பல இடங்களில் ரஷ்யர் பலமாகத் தாக்கிவருவதாகத் தெரிகிறது. ஒரு போர்க்களத்தில் 6,000 ஜெர்மானியரைக் கொன்றதாக ரஷ்யர் கூறுகின்றனர். ஆனாலும் ஜெர்மானியர் முன்னேறிக் கொண்டு தான் இருக்கிறார்களாம். [illegible] நீபர் நதியில் உள்ள அணை ஒன்று உடைக்கப்பட்டும், நீபரோ-பெட்ரோவஸ்க் நகரம் காலி செய்யப்பட்டுவிட்டதாகவும் ஜெர்மானியர் கூறுகின்றனர். இந்த யுத்தங்களுள் ஒன்றில் ஜெர்மன் வரிசைகளுக்குப் பின் பதுங்கிப் போர் செய்யும் ஸோவியத் படையொன்று 8 தளவாட டெப்போக்களையும் 4 பெட்ரோல் டெப்போக்களையும் நாசம் செய்து விட்டனவாம்.

மத்திய முனையில் கோமாலைத் தாண்டி 40 மைல் முன்னேறி யிருப்பதாக ஜெர்மானியர் கூறுகின்றனர். இதனால் நீபர் நதிக் கரையிலுள்ள கீவ் நகருக்கும், தொழிற்சாலைகள் மிகுந்த பிரதேசமாகிய கார்காவுக்கும் மிகுந்த ஆபத்து ஏற்பட்டிருப்பதாக லண்டனில் கருதப்படுகிறது. ஜெர்மானியர் கார்காவிலிருந்து 60 மைல் தூரத்தில் இருக்கின்றனர். இந்தப் பிரதேசத்தில் ஜெர்மனிக்கு மிகுந்த சேதம் ஏற்பட்டிருக்கிறது. 90,000 பேருக்கு அதிகமான ஆட்கள், 200 டாங்கிகள், 100 விமானங்கள் நூற்றுக் கணக்கான பீரங்கிகள் முதலியன சேதம்.

ஒடிஸா முனையில் கவசம் தரித்த ரஷ்ய ரயில்வண்டித் தொடர் ஒன்று ஜெர்மன் ருமேனிய வரிசைகளை ஊடுருவிச் சென்றதாம். ஒடிஸாவை அதன் நகர வாசிகள் உள்பட ரஷ்யர் தீவிரமாகக் காத்துவருகின்றனர். ஒடிஸா அதிக ஆபத்திலிருக்கிறது என ஜனங்களுக்கு ஒரு கோரிக்கை விடுக்கப்பட்டிருக்கிறது.

ஹிட்லரும்-முஸோலினியும் ஐந்து நாட்கள் வரை ஹிட்லரின் தலைமைக் காரியாலயத்தில் சந்தித்து ராணுவ, ராஜீய விஷயங்கள்பற்றி விவாதித்தனர் என்றும், கிழக்குப் போர் முனைக்கு இதாலிய சேனைகளை அதிகமாக அனுப்பிவைக்கும்படியும், தளவாட உற்பத்தியை அதிகப்படுத்தும்படியும் ஹிட்லர் கேட்டிருப்பதாகத் தெரிகிறது. இருவரும் போர்முனைகளைப் பார்வையிட்டதாகவும், முஸோலினி கோயரிங்கைத் தனியாகச் சந்தித்துப் பேசினதாகவும் தெரிகிறது.

ரஷ்யப் போர்முனையில் ஜெர்மானியருக்கு இது வரையில் 25 லட்சம் ஆட்களுக்கு மேல் சேதம் ஏற்பட்டிருக்கிறதென்றும் இதில் 10 லக்ஷத்துக்கதிகமாக கொல்லப்பட்டிருக்கின்றனர் என்றும் ரஷ்ய அறிக்கை ஒன்று கூறுகிறது. ஆகஸ்டு 1-ந் தேதியிலிருந்து 22-ந்தேதி வரை கவசம் தரித்த படைகள் காலாட் படைகள் முதலிய 74 படைகள் நஷ்டம் என்று மாஸ்கோ அறிக்கை கூறுகிறது.

### இரான் போர்

சென்ற வாரத்தில் இரான் மீது பிரிட்டனும் ரஷ்யாவும் நடவடிக்கை எடுத்துக்கொண்டதற்கிணங்க பிரிட்டிஷ், ரஷ்யப் படைகள் இரானில் வெகு மும்முரமாக முன்னேறின. இரான் சர்க்கார் வெறுமனே ரத்தம் சிந்தப்படுவதை சகிக்காமல் போரை நிறுத்திக்கொண்டு விட்டனர். 27உ புதன்கிழமை யன்று இரான் மந்திரி சபை ராஜிநாமாச் செய்துவிட்டது. இரான் மன்னர் போரை நிறுத்தும்படி பிரகடனம் செய்தார். 'ஜெர்மன் தூதரான வான் பேபன் அச்சு நாடுகளின் ஸ்திரீகள் குழந்தைகள் முதலியவர்களை துருக்கிக்கு அனுப்பிவிட்டதாகவும் இரான் விஷயத்தில் ஜெர்மனி ஒன்றும் செய்யப் போவதில்லை என்றும் தெரிவித்துவிட்டு ஹிட்லரைக் காணப் போயிருப்பதாகத் தெரிகிறது.

இரானில் இன்னும் ரஷ்யப் படைகளும் பிரிட்டிஷ் படைகளும் முன்னேறிக்கொண்டு இருக்கின்றன. ஆனால் பிரிட்டிஷார் இரானுடன் போர் செய்யப் போவதில்லை என்றும் கருணை வாய்ந்த முறையிலேயே நடவடிக்கைகளை எடுக்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

### துருக்கியில் நெருக்கடி

கிரேக்க—துருக்கி எல்லையிலும், பல்கேரியத் துருக்கி எல்லையிலும் ஜெர்மன் இதாலியத் துருப்புகள் ஏராளமாகக் குவிந்து கிடக்கின்றனவாம். துருக்கி எல்லையில் 16 நாஜி, பல்கேரிய, இதாலிய டிவிஷன்களும், பல்கேரியாவில் 4 பெரிய நாஜி டிவிஷன்களும் இருக்கின்றன என்று தெரிகிறது. துருக்கியை தாக்குவதற்கு வேண்டிய படைகளை ஜெர்மானியர் இன்னும் கொண்டுவைக்க வில்லையென்றும் [illegible] ஆனால் துருக்கியை எந்த நிமிஷத்திலும் ஜெர்மனி தாக்கக்கூடிய வசதிகள் இருக்கின்றன என்றும் சொல்லப்படுகிறது. கிரீஸில் 2 ஜெர்மன் பட்டாளங்கள் இருக்கின்றன. ஆனால் இது துருக்கிக்கு வெகு சமீபத்தில் இல்லை, டார்டனல்ஸ் ஜலசந்தியின் முகப்பிலுள்ள கிரேக்க ஏஜியன் தீவில் மூன்று இதாலியப் பட்டாளங்கள் நிறுத்தப்பட்டிருக்கின்றன.

### கீழக்கோடியில் நெருக்கடி வலுக்கிறது

சென்ற வாரத்தில் ஜப்பானுக்கும் அமெரிக்காவுக்கும், பசுபிக் சமுத்திரத்தின் பாதுகாப்புக்காக, பேச்சு வார்த்தை நடந்துகொண்டிருக்கின்றது. இவைதப்பற்றிய செய்திகள் விவரமாகத் தெரியவில்லை. ஜப்பான் பிரதம மந்திரி கோனுயி இடமிருந்து ஜனதிபதி ரூஸ்வெல்டுக்கு ஒரு செய்தியை அட்மிரல் நொமுரா கொடுத்தார். சீன விவகாரங்களை ஒருவழியாக தீர்த்து விட்டு, பஸிபிக்கில் நிலையான சமாதானத்தை நிலைநாட்டுவதன் பொருட்டு கிழக்கு ஆசியப் பகுதியில் விரிவான ஒரு புதிய ஏற்பாட்டை அமுலுக்குக் கொண்டுவருவது ஜப்பானின் நோக்கம் என்று வாஷிங்டனில் கருதப்படுகிறது. ஆனால் "அமெரிக்கா, பிரிட்டன், சீனா, டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகள் இவற்றின் முற்றுகையை ஜப்பான் தகர்க்க வேண்டும். அவசியமானால் நாம் பலாத்காரத்தைப் பிரயோகிப்போம்" என்று ஜப்பானிய ராணுவத்தைச் சேர்ந்த விளம்பர அதிகாரி கர்னல் ஹாயா மாஹூசி செப். 1ந்தேதி ரேடியோவில் பேசியிருக்கிறார். அமெரிக்காவிலும் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் தொழிலாளிகள் தினப் பிரசங்கத்தில் நாஜி ஆதிக்கத்தை அடக்க அமெரிக்கர் மிக ஊக்கம் காட்ட வேண்டும் என்று பேசியிருக்கிறார். அமெரிக்க—ஜப்பான் சமரசப்பேச்சு சம்பந்தமாக வாஷிங்டனிலிருந்து வந்த செய்தி கூறுவதாவது:- உடன்படிக்கைகளை பலாத்காரத்தாலன்றி சமரசப் பேச்சு மூலமே மாற்றவேண்டும் என்று கார்டல் ஹல் தெளிவுபடுத்தி யிருக்கிறார். இதை ஜப்பான் ஒப்புக் கொள்வதாயின் 1931ம் ஆண்டு முதல் அது எடுத்துக்கொண்ட அக்கிரம நடவடிக்கைகள் அனைத்தையும் வாபீஸ் பெற்றாக வேண்டும். ஆனால் ஜப்பான் அவ்வாறு செய்யும் எனக் கருதப்பட வில்லை என்று தெரிவிக்கிறது.

### சோமசுந்தர வித்தியாசாலை நேமத்தான்பட்டி

#### மாணவர் சங்கத் திறப்பு விழா

மேல் கண்ட வித்யாசாலையின் மாணவர் சங்கம் திருப்பத்தூர் நாகப்பா மருதப்பா போர்டு பாடசாலை ஆசிரியர் எஸ். சங்கரநாராயண-பிள்ளை அவர்கள் தலைமையில் ஆரம்பித்து வைக்கப்பட்டது. மாணவ மாணவிகளின் பாட்டு, பேச்சு, நடிப்பு முதலிய வைபவங்களுக்குப் பிறகு ஸ்ரீமான்கள் வி. கந்தசாமிப் பிள்ளை, எம். சங்கரமூர்த்தியா பிள்ளை; நம்பிராஜன் முதலியவர்கள் சங்கத்தின் நோக்கத்தைப் பற்றிப் பேசினர்கள். சங்க நிர்வாகிகள் தேர்தலுக்குப் பிறகு வந்தனோபசாரத்துடன் கூட்டம் முடிவுற்றது.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

ரங்கூன் செப். 3உ

| | |
|---|---|
| நசேன் நெல் | 152/154 |
| சுகந்தி வெள்ளை | 438/ 88 |
| பெரிய மில்ஸ் ஸ்பெஷல் | 355/360 |
| புழுங்கல் | 420/425 |
| மில்சார் புரோம் | 415/420 |
| ,, மாண்டலே | 380/390 |
| நசேன் | 370/375 |

### கொழும்பு ரப்பர்

கொழும்பு, செப். 2உ

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 57 சதம் |
| ஷீட் ,, | 55⅝ ,, |

### கொப்பரா

| | |
|---|---|
| முதல் தரம் | ரூ. 32-75 |

### சென்னை மார்க்கெட்

சென்னை, செப். 2உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (ரொக்க விலை) | 28 | 8 | 0 |
| சவரன் (சில்லறையில்) | 28 | 0 | 0 |
| மூளை தோலா 1க்கு | 41 | 10 | 0 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 63 | 14 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 10 | 6 |

### நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கம், சிங்கப்பூர்

#### 11-வது வருட 7-வது நிர்வாக சபைக் கூட்டம்

விஷு வருஷம், ஆடி மாதம், 24உ, (8-8-41) வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் உபதலைவர் திருவாளர் லெ. அ. அ. கா. மு. மெய்யப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. சிங்கப்பூரிலுள்ள இந்திய துருப்புகளுக்கு விடுதி யொன்று கட்டும் விஷயமாய் இந்திய துருப்புகள் விளையாட்டுக் கமிட்டி கௌரவ காரியதரிசியிடமிருந்து பண உதவி கோரி வந்த விண்ணப்பம் சம்பந்தமாக $ 30 00 நன்கொடையளிப்பதென தீர்மானிக்கப்பெற்றது. கல்கத்தாவில் கவி அரசர் ரவீந்திரநாத் டாகூர் அவர்கள் காலஞ் சென்றதைக் குறித்து அன்னருடைய குடும்பத்தார்களுக்கு பூரண அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்வதென தீர்மானிக்கப்பெற்றது.

ஸ்ட்ரெயிட்ஸ் ஸெட்டில்மெண்ட்சர்க்கார் மலாகா பகுதிக்கு மலாகா கா. ச. அ. அ. சம்பந்தம் செட்டியார் அவர்களை புத்தவரி அலெஸராக நியமித்திருப்பதற்கு மகிழ்ச்சி தெரிவித்துக்கொள்ளப்பெற்றது.

மாட்சிமை பொருந்திய மன்னர் பிரான் பிறந்ததின் விழாவில் பிரதம சர்க்காரால் குமார ராஜா ஸர் முத்தையா செட்டியார் அவர்களுக்கு, ஸர் பட்டமும், ராவ்பஹதூர் க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்களுக்கு, ராவ்பஹதூர் பட்டமும் வழங்கி செட்டிமார் சமூகத்திற்கு பெரும் கௌரவம் ஏற்படுத்தியதின் மகிழ்ச்சியை அன்னாயர்களுக்கும் திரு. ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் அவர்களுக்கும் தெரிவித்துக் கொள்வதென தீர்மானிக்கப்பெற்றது.

### பர்மாவுக்கு மேலும் சீர்திருத்தம்

#### பர்மாப் பிரதம மந்திரி லண்டன் போவதின் நோக்கம்

பர்மாவை உடனே பூரண குடியேற்ற நாட்டந்தஸ்தாக்க வேண்டும் என்பதை வற்புறுத்துவதற்காகவே பர்மியப் பிரதம மந்திரி கனம் யுஸா இப்போது லண்டன் செல்கிறார். பர்மிய சர்க்கார் சட்டத்தை பர்மா வெற்றிகரமாக அமுல் நடத்தியிருப்பதாகவும் மேற்கொண்டு சீர்திருத்தம் கோர அதற்கு பாத்யதை இருக்கிறது என்றும் பிரதம மந்திரி எண்ணுவதாகத் தெரிகிறது.

### கிராமத்தில் பலி நிறுத்தம்

தென்னிந்திய ஜீவாகுண பிரசார சபை செய்த பிரசாரத்தின் பலனால் கருங்குழி மேலவலம் கிராமத்தில் பொன்னியம்மனுக்கு இவ் வருஷம் 20-8-41ல் நடந்த திருவிழாவின் போது 20 ஆடுகளும் நூற்றுக் கணக்கான கோழிகளும் உயிர்தப்பிப் பிழைத்தன.

## விலைவாசிகள் ஜாபிதா

இராமனதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா விலை நிர்ணயக் கமிட்டி 25—8—41ல் நிர்ணயித்த விலைகள்:—

| | | | |
|---|---|---|---|
| அரிசி முதல் தரம் நெல்லூர் சம்பா | ரூ 1க்கு | படி | 3 |
| " மல்லிகை சம்பா | " | " | 3⅜ |
| அரிசி (2-ந் தரம்) பெருவெட்டு | | " | 3¾ |
| ரங்கூன் கால் குருணை | " | " | 5 |
| கேப்பை | " | " | 8 |
| பருப்பு முதல் தரம் | " | " | 4-4½ |
| உளுந்தம் பருப்பு | " | " | 3½ |
| பாசிப்பருப்பு | " | " | 4½ |
| கடலைப்பருப்பு | " | " | 4⅛ |
| கடலை | " | " | 4¾ |
| நெல் முதல்தரம் | " | " | 9½ |
| " 2ம் தரம் | " | " | 10 |
| மல்லி | " | " | 7½ |
| உப்பு | " | " | 10 |
| பழுப்பு சீனி | | வீசை | 0-8-6 |
| சர்க்கரை | | " | 0-3-6 |
| அஷ்டகிராம் சீனி | | " | 0-7-3 |
| மிளகாய் வத்தல் சம்பா | | " | 0-11-6 |
| " குண்டு | | " | 0-10-6 |
| தீப்பெட்டி | | | 0-0-5 |
| மண்ணெண்ணெய் நயம் ஒரு பாட்டில் | | | 0-3-0 |
| திருப்பூர் 4-முழம் வேஷ்டி 1-க்கு | | | 0-13-0 |
| ஈரோடு 4-முழம் வேஷ்டி | | " | 0-11-0 |

## மதிப்புரை

### விஸ்வபந்து

தி. ம. நடராஜன் அவர்களைத் ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் இந்தப் பத்திரிகை இரண்டு வருஷ காலமாக பல கஷ்டங்களுக்கு உள்ளாகி நிறுத்தப்பட நேர்ந்தது. மேற்படிப் பத்திரிகை தனது 8வது வருஷத்தை ஆவணி முதல் தேதியிலிருந்து ஆரம்பித்துள்ளது. விஸ்வகர்ம சமூகத்தின் முன்னேற்றத்துக்கும், தொழிலபிவிருத்திக்கும் வேண்டியவைகளை மேற்படிப் பத்திரிகை செய்ய முன்வந்திருக்கிறது. இதன் உள்நாடு வருஷ சந்தா ரூ 2-0-0; ஆறுமாதம் ரூ 1-2-0 தனிப்பிரதி 0-1-6; வெளிநாடு—வருஷ சந்தா ரூ 3-0-0 தனி இதழ் 0-2-0.

### வெற்றி முரசு

இது பி. வி. வியாஸராவ் அவர்களை ஆசிரியராகக் கொண்ட போட்டி விமர்சனப் பத்திரிகையாகும். பிரதி ஞாயிறு தோறும் வெளிவருகிறது. ஆனந்த விகடன் பகுத்தறிவுப் போட்டி, 'இந்திரா' கலையறிவுப் போட்டி, நாரதர் சித்திரப் போட்டிக்கான மாற்றுவிடைகளும் விமர்சனங்களும் தெளிவாக எழுதப்பட்டு வருகின்றன. போட்டி நேயர்களுக்கு இது ஒரு வெற்றி முரசாக உதவும் என நாம் நினைக்கலாம். இதன் வருஷ சந்தா ரூ 5-0-0. ஆறுமாதம், மூன்று மாத சந்தா முறையே ரூ 2-8-0, 1-8-0. தனிப்பிரதி விலை அணு ஒன்றரை.

## சர்க்கார் விடுமுறை நாட்கள்

சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குச் சட்ட பூர்வமாக இல்லாத சில விடுமுறை நாட்களை சர்க்கார் குறைக்கப் போவதாகத் தெரிகிறது. இதன் மூலம் ஜனவரி 2-ந் தேதி விடுமுறை நாளும், டிஸம்பர் கடைசிச் சனிக்கிழமைக்கு முந்திய சனிக்கிழமையும், ஈஸ்டர் விடுமுறையை 4 நாட்களாகக் குறைக்கவும், 'மாண்டி' வியாழக்கிழமையை கத்தோலிக்க கிறிஸ்தவர்களுக்கு மட்டும் அளிப்பது என்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.



பிரிட்டிஷ் விமானப் படையினர் உடை சரியாக அணிந்தனரா என்று பரிசீலனை செய்யப்படுகின்றனர்.







## கவுன்ஸிலர்களின் பதில்

[மாகாணக் கமிட்டித் தலைவரின் நோட்டீசுக்கு, சம்பந்தப்பட்ட கவுன்சிலர்கள் அனுப்பியிருக்கும் பதில் கீழ் வருமாறு என்று பார்ட்டி உபதலைவர் ஸ்ரீ வி. கிருஷ்ணய்யாவர்கள் நமக்கு அனுப்பியிருக்கிறார்கள்.]

25—8—41ல் தாங்கள் அனுப்பிய நோட்டீஸ் கிடைத்தது. தமிழ்நாடு ஸ்தல ஸ்தாபன காங்கிரஸ் கட்சி விதி 22 ன்படி இன்னாரைத்தான் தலைவராகத் தேர்ந்தெடுக்கவேணுமென்று கட்டளையிட தங்களுக்கு அதிகாரமில்லை. விதிப்படி அதிகாரமில்லையென்பதும் தவிர நாங்கள் அறிந்தவரை இதுகாரும் யெங்கும் பார்ட்டியின் கருத்துக்கு மாறாகத் தமிழ் நாடு காங்கிரஸ தலைவர் இன்னாரை யெடுங்கள் என்று கட்டாயப்படுத்தியதாகவும் தெரியவில்லை. பார்ட்டி தனது விருப்பத்துக்கிணங்க, சேர்மனை தெரிந்தெடுத்ததானது காங்கிரஸ் கட்டுப்பாட்டை மீறியதாகவோ காங்கிரஸ் ஒற்றுமையை குலைத்ததாகவோ எவ்வாறு ஏற்படும்?

தாங்கள் எங்கள் செய்கை காங்கிரஸ் ஒற்றுமையைக் குலைத்துக் கட்டுப்பாட்டையும் மீறியதாக கூறுவது ஆச்சரியமாக இருக்கிறது. எங்கள் மீது எவ்வித நடவடிக்கையும் எடுப்பதற்கு காரணம் எதுவும் இல்லை.

நாங்கள் செய்தது தவறு என்று ஏற்பட்டால் எந்த நிமிஷத்திலும் பதவியை ராஜிநாமாச் செய்யத் தயாராக இருக்கிறோம். இவ்விவரங்களை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அறிவித்திருக்கிறோம். அவர்கள் முடிவுப்படி நடக்க சித்தமாயிருக்கிறோம்.

வி. கிருஷ்ணய்யர், முரு. அருணாசலம், சி. ராம. மெய்யப்பனம்பலம், சி. முரு. நாராயணன் செட்டியார், சொ. நாராயணன், ராம. அழகப்பா, அழ. வள்ளியம்மை, கரு. பழனி, ராய. சொக்கலிங்கம், அ. கா. அல்லாபிச்சை அம்பலம்.

## ரூஸ்வெல்டு—சர்ச்சில் சந்திப்புப்படம்

### ஸ்வீடனில் தடை

ரூஸ்வெல்டும்—சர்ச்சிலும் சந்தித்தது பற்றிய படத்தை ஸினிமாவில் காட்டக் கூடாதென ஸ்வீடன் சர்க்கார் தடுத்து விட்டார்கள். இந்தப் படத்தைப் பார்த்து ஜனங்கள் உற்சாகமாய் ஆரவாரித்ததே இந்தத் தடையுத்தரவுக்குக் காரணமாம்.

## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1940ளு S. C. No. 469

சிவகெங்கை ஜமீந்தார் அவர்கள் Died—வார்சு மைனர் Sri D. ஷண்முக ராஜா Represented by the District Collector of Ramnad at Madura } 2-வது வாதி

லெட்சுமணத் தேவர் 3
PR. VR. வீரணத் தேவர் 4
கருப்பய்யாக் கோனார் 7
முத்து சேர்வை 9
முத்து ராஜா 15 } 3-4,7,9 & 15 பிரதிவாதிகள்

விட்டனேரி கிராமம் 1346 to 1348 பசலி பொறுப்பு பாக்கி வட்டியுள்பட சிவகெங்கை ஜமீந்தார் அவர்களுக்கு நாங்கள் செலுத்த வேண்டிய ரூபாய் 65—2—9 யும் வரப்பற்ற பிருது செய்து 13—9—41 வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணை இருந்தால் ஷை தேதி பகல் 10½ மணிக்கு ஷை பிரதிவாதிகள் கோர்ட்டில் தெரிவித்துக்கொள்ளலாம்.

1-9-1941, சிவகங்கை. } ஜி. பாலகிருஷ்ணய்யர், 2-வது வாதிவக்கீல்.



## கல்கத்தாவில் நூதனக் கொள்ளை!

### துப்பாக்கியை நீட்டிப் பயமுறுத்தினர்

கல்கத்தாவின் கிழக்குப் பகுதியில் பெல்லிய கட்டா என்ற இடத்தில், சுமார் அரை டஜன் பேர் வழிகள் ஈட்டிகளையும் துப்பாக்கிகளையும் ஏந்தி, ஒரு சர்க்கார் ஊழியர் வீட்டில் புகுந்து, படித்துக் கொண்டிருந்த ஷையாரின் குழந்தைகளை துப்பாக்கியை நீட்டிப் பயமுறுத்தி, உள் புகுந்து, விலை மதிப்புள்ள சாமான்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு வீதியில் காத்திருந்த ஒரு டாக்ஸியில் ஏற்றிக்கொண்டு போய்விட்டார்களாம். இது பற்றி போலீஸார் தகவல் விசாரித்து வருகின்றனர்.

### பம்பாய் கடை வேலையாட்கள் சட்டம்

"பம்பாய் கடை வேலையாட்கள் சட்டம் ஒரே ஆள் உள்ள கடைகளையும் கட்டுப்படுத்தும்" என்று பிரதம நீதிபதி ஸர் ஜான் போமண்டும் நீதிபதி ஸென்னும் ஒரு வழக்கில் தீர்ப்புக் கூறினார்கள். வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர் ஒரு வெற்றிலை பாக்குக் கடைக்காரர். இச் சட்டத்தின்படி பம்பாயில் கடைகள் தினந்தோறும் 9 மணிக்கும், வாரத்துக்கு ஒரு நாளும் மூடப்படவேண்டும்.

## காரைக்குடி நகர சபை

### வடிகால் திட்டம் நிறுத்திவைக்கப்பட்டது

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டம் ஒன்று ஆகஸ்டு மீ 30உ சனிக்கிழமை மாலை 5 மணிக்கு சேர்மன் ஸ்ரீமான் சி. முரு. நாராயணன் செட்டியார் அவர்கள் தலைமையில் கூடியது. தலைவர் உள்பட 8 அங்கத்தினர்கள் ஆஜரானார்கள். கீழ்க்கண்ட சில முக்கிய விஷயங்கள் அப்போது எடுத்துக்கொள்ளப்பட்டு முடிவு செய்யப்பட்டன.

### வக்கீல் மீது நடவடிக்கை

வக்கில் ஸ்ரீ சோமசுந்தரமய்யர் விஷயமாய் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கும்படி சேர்மன் ஸ்ரீ சி. முரு. நாராயணன் செட்டியாரால் கொண்டுவரப்பட்ட குறிப்பிற்கிணங்க, வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க சேர்மன், வி. கிருஷ்ணய்யர், டி. பார்த்தசாரதி அய்யங்கார் இவர்கள் அடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. வக்கீல் பேரில் வக்கீல் சட்டப்படி நடவடிக்கை எடுக்கும் விஷயத்தில் சிலவுக்குக் கவுன்சில் அனுமதிகொடுத்தது.

### முனிஸிபல் வடிகால் திட்டம்

காரைக்குடி முனிசிபல் வடிகால் திட்டம் சம்பந்தமான எஸ்டிமேட்டுகள், பிளான்கள் முதலியவைகளை, அநேக அவசரத் திட்டங்கள் ஆலோசனையில் இருந்து வருவதின் நிமித்தம் நிறுத்திவைக்கும்படி கோரியுள்ள கவர்ன்மெண்டாரின் உத்தரவுப்படி திட்டத்தை நிறுத்திவைக்க கவுன்ஸில் அனுமதித்தது.

### ரிப்பேர் சிலவினங்கள்

முனிஸிபல் சாத்தப்பா பார்க் ரேடியோவுக்குச் சில்லரைச் சாமான்கள் சப்ளை செய்த வகையில் ரூ. 48—8—0 ம்; முனிஸிபல் குப்பை வாரிக்கு ஒரு Fan belt வாங்குவதற்கு ரூ. 3—0—0ம்; ஷை வாரிக்கு ஒரு Brake Drum வாங்க ரூ. 48—8—0 ம்; செஞ்சை சிசு சம்ரக்ஷண சாலை, ரெஸிடென்ஷியல் ஸ்கூல், ஹரிஜன் காலனி, பாரதி பள்ளிக்கூடம், சிவன் கோவில் முனிசிபல் ஸ்கூல் கழனிவாசல் சாந்தி முனிஸிபல் ஸ்கூல் முதலிய இனங்களுக்கு ரிப்பேர் செய்த வகையில் ரூ 302—15—0 செலவாகியிருக்கிறது.

டவுன் பிளானிங் கமிட்டிக்கு ஸ்ரீ சா. கணேசன் செட்டியாருக்குப் பதிலாக ஸ்ரீ மெ. நா. சித. சிதம்பரம் செட்டியார் தேர்ச்தெடுக்கப்பட்டார்.

இன்னும் மாமூலான பல விஷயங்கள் எடுத்துக்கொண்டு முடிவு செய்யப்பட்டு கூட்டம் சுமார் 7 மணிக்கு முடிவுற்றது.





## தேவகோட்டை முனிஸிபாலிட்டி

சென்ற செப்டம்பரில் தேவகோட்டை முனிஸிபாலிடியைக் கலைக்க உத்தரவிட்டனர். மேல் கண்ட உத்தரவு ஒரு வருஷத்துக்கு அமுலிலிருக்கும் என்று அப்போது தெரிவிக்கப்பட்டது. இப்போது அந்த உத்தரவு மேலும் 6-மாதத்துக்கு அமுலிலிருக்கும் என்று சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறார்கள்.

## முனிசிபல் வரி எதிர்ப்புக் கழகம் தேவகோட்டை

27-8-41 மாலை 5 மணிக்கு வரி கொடுப்போர்கள் கூட்டம் நகரத்தார் ஹாலில் திரு. கரு. கி. சொர்ணநான் செட்டியாரவர்கள் தலைமையில் கூடியது. அவ்வமயம் ஸ்பெஷல் ஆபீஸர் வீட்டு வரியை 1941 எப்ரல் 1உ 12% லிருந்து 15% ஆக உயர்த்தியதையும் 1942 எப்ரல் 1உ முதல் மேலும் 15% லிருந்து 18% ஆக உயர்த்த உத்தேசித்திருப்பதை வன்மையாக கண்டித்து, வீட்டு வரியை எவ்வளவு தூரம் குறைக்க முடியுமோ அவ்விதம் குறைப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் நடத்த கீழ்க் கண்டவர்களடங்கிய ஒரு கமிட்டியை நியமித்தது. ஷை கமிட்டி 10-9-41-க்குள் தங்கள் ரிப்போர்ட்டை சமர்ப்பிக்கவேணுமாய் கேட்டுக்கொள்ளப்பட்டது.

கமிட்டித் தலைவர்: எம். ஜி. முகுந்தராஜ அய்யங்கார் அவர்கள். செயலாளர்: டி. ஆர். அருணாசலம், கா. அண்ணாமலை. ஷை அதிக வரி எதிர்ப்புக் கமிட்டியில் வார்டுகளின் பிரதிநிதியாக 24 பேர் அங்கம் வகிக்கிறார்கள்.

## கரி வாயு வண்டிக்கு சர்க்கார் உதவி

### கரி உற்பத்தியை அதிகப்படுத்துவர்

பெட்ரோல் கட்டுப்பாட்டால் ஏற்பட்ட நிலைமையைச் சமாளிக்க நம் மாகாணத்தில் இப்போதுசுமார் 2000 கரிவாயு மோட்டார்கள் ஓடுவதாகவும், அவைகளுக்கு வருஷத்திற்கு 30,000 டன் கரி தேவையாக இருக்குமென்றும் கருதப்படுகிறது. இதற்காகச் சர்க்கார் ரிசர்வ் காடுகளில் சில பகுதிகளை கரி உற்பத்திக்காக கண்டிராக்டுக்கு விடப்போவதாகவும், இதன்மூலம் 12,000 டன் கரி கிடைக்கும் என்றும் பாக்கித் தேவைக்கு தனிப்பட்டவர்களின் சவுக்குத் தோட்டங்களிலிருந்து கரி உற்பத்தி செய்துகொள்ள ஒரு ஏற்பாடு செய்யப் போவதாகவும் தெரிகிறது.

---

### லவால் சுடப்பட்டார்

#### இப்பொழுது குணமடைந்துவருகிறார்

பிரான்ஸ் மாஜி பிரதம மந்திரி லவாலும் மார்ஷல் டீடும் வெர்ஸேல்ஸில் ரஷ்யப் போர் முனைக்கு அனுப்பப்படவிருந்த பிரெஞ்சுத் தொண்டர் படை யணிவகுப்பைப் பார்வையிடுகையில் 29 வயது வாலிபன் ஒருவனால் சுடப்பட்டனர். அன்றுதான் தொண்டர் படையில் அவன் சேர்ந்ததாகவும், யாரையாவது ஒருவரைச் சுடுவதற்கென்றே அவன் அங்கு சேர்ந்ததாகவும் தன் வாக்குமூலத்தில் தெரிவித்தான். லவாலுக்கு கையிலும் விலாப்புறத்திலும் குண்டுகள் பாய்ந்தன. டீடுக்குச் சொர்ப்ப காயம் ஏற்பட்டது. லவால் உடம்பிலிருந்து குண்டுகள் வெளியே எடுக்கப்பட்டு விட்டன. இப்போது லவால் குணமடைந்து வருகிறார்.

---

### ஸ்ரீ ஏ. எம். எம். வெள்ளையன் செட்டியார்

பர்மா ஜனப் பிரதிநிதி சபை மெம்பரும், பர்மா இந்திய தூது கோஷ்டி மெம்பருமான ஸ்ரீமான் ஏ. எம். எம். வெள்ளையன் செட்டியார் 26உ மாலை ஸிம்லாவிலிருந்து சென்னை வந்தார்.

---

### ராவ்பகதூர் C. V. CT. வெங்கிடாசலம் செட்டியாருக்குப் பாராட்டு

கானாடுகாத்தான் எலெக்ட்ரிக்சப்ளை கார்பொரேஷன் ஊழியர்கள் சங்கத்தின் 2-வது வருடக் கொண்டாட்டம் 21-8-41உ நடந்தபோது பள்ளத்தூர் திவான்பகதூர் ஏ. எம். எம். முருகப்ப செட்டியார் தலைமையில் கானாடுகாத்தான் ஸ்ரீ ஸி.வி.ஸி.டி. வெங்கிடாசலம் செட்டியாருக்கு "ராவ்பகதூர்" பட்டம் அளிக்கப்பட்டிருப்பதைப் பாராட்டி சங்க ஊழியர்களால் ஒரு உபசாரப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது.

---





சினிமாச் செய்திகள்

## இந்தியாவுக்கு முதல் பர்மியப் படம்

### ஸ்ரீ ஏ. கே. செட்டியார் முயற்சி

சென்னை டாகுமெண்டரி பிலிம்ஸைச் சேர்ந்த ஸ்ரீ ஏ. கே. செட்டியார் சமீபத்தில் பர்மா சென்று திரும்பிவந்திருக்கிறார். காரணமில்லாமல் அவர் பர்மா போய்த் திரும்பவில்லை. பர்மாவுக்கு ஒரு தமிழ்ப்படத்தைக் கொடுத்துவிட்டுத் தமிழ்நாட்டுக்கு ஒரு பர்மியப்படத்தைக் கொண்டு வந்திருக்கிறார். பர்மியருக்குக் கொடுக்கப்பட்ட தமிழ்ப்படம் மகாத்மா காந்தி. தமிழருக்குக் கொடுக்க விருக்கும் படம் லங்கமாலா என்பது.

மாகாத்மா காந்திப் படம், பர்மிய தலைப்புகளுடன் காந்திஜியின் 73வது ஜன்ம தினத்தன்று பர்மா எங்கும் காட்டப்படும். இதன் பூர்வாங்கக் காட்சி சென்றமாதம் ரங்கூன் துரின் சினிமா ஹாலில் நடைபெற்றது. ரங்கூன் மேயர் யு தின் மாங் தலைமை வகித்தார். இக்காட்சிக்கு பர்மியப் பத்திரிகை, படத்தொழில் பிரதிநிதிகளாயுள்ள 100 பர்மியர், 10 சீனர்கள், 90 இந்தியர்கள் விஜயம் செய்திருந்தனர். சுகாதார மந்திரியு தாவாடி மாங் மாங்கும் வந்திருந்தார். மாஜி ரங்கூன் மேயர் யு பாவின், சீனச் சலனப்படச் சங்கக் காரியதரிசி டி. ஒய. பவ், ஸ்ரீமதி ஹாண்டே எம். ஏ., ஆகியோர் காந்தியடிகளின் வாழ்க்கைச்சரிதப்படத்தைப் புகழ்ந்துபேசினர்.

ஸ்ரீ செட்டியார் நமக்குக் கொண்டுவந்திருக்கும் லங்கா மாலா என்பது ஒரு வனக்காட்சிப் படம். இப்படத்தைத் எப்படி தமிழர் ரசிக்கின்றனர் என்று கண்டபின் மேலும் பல பர்மியப் படங்களை தருவிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்தியாவிலேயே முதலாவதாகக் காட்டப்படும் பர்மியப் படம் இதுதான் என்பது குறிப்பிடத்தக்கது.

இத்துடன் ஸ்ரீ செட்டியார் பர்மியர் நடனம், சங்கீதம், அவர்களுடைய விளையாட்டு, பர்மிய இயற்கை வனப்பு ஆகியவைகளைக் காட்டும் மூன்று துண்டுப் படங்களும் கொண்டுவந்திருக்கிறார். இரு நாடுகளின் கலாசாரங்களில் தொடர்பு கிடைப்பதற்கு ஏதுவான இந்த கைங்கர்யம் இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் அவ்வளவு நல்ல உறவு இல்லாத இக்காலத்திற்கு மிகவும் உதவியாக இருக்கக் கூடுமல்லவா?

### படப்பிடிப்பில் சிக்கனம் வேண்டும்

#### பிலிம் வாத்தகசபை நிர்வாக அங்கத்தினர் எச்சரிக்கை

யுத்தத்தினால் படத்தொழில் அதிகம் பாதிக்கப்படவில்லை என்று நம்பப்பட்டு வருவதை எச்சரித்து ஷையார் படத்தின் நீளத்தைக்குறைத்துக்கொள்ளுவதற்கு படமுதலாளிகளும் பொது ஜனங்களும் ஆதாவளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக்கிறார். இப்போதுள்ள நீளத்தில் 3000, 4,000 அடிகள் குறைப்பதனால் ரூ 5000 மிச்சப்படுகிறது என்றும், வருஷா வருஷம் தயாரிக்கப்படும் 150 படங்களில் 7½ லக்ஷம் ரூபாய் மிச்சமேற்படும் என்றும் அவர் கூறுகிறார். தவிர ஹாலிவுட் படங்களைப் போல் 7,000 8,000 அடிகளில் படம் எடுத்து அவைகளுடன் சிறிய தமாஷ் படங்கள், செய்திப் படங்கள் முதலியவைகளை காட்டவில்லை என்ற புகாரும் இதனால் நீங்குவதுடன் படத்தொழிலுக்கு ஒரு முற்போக்கை உண்டாக்கும் என்பது அவர் கருத்து.

### 30 லக்ஷம் நடிகர்கள் கொண்ட படம்

ஆங்கில பாங்கர் ரஸாயன சாலையில் 30,00,000 நடிகர்களும் 300 நக்ஷத்திரங்களும் நடிக்கும் ஒரு மர்மப் படம் தயாராகிறது. ஆனால் இதை டாக்டர்களும் வைத்யப்படிப்பு மாணவர்களும் தான் பார்க்கலாம்! ஷை படத்தில் ஒரு பெரிய சண்டை, ரத்தத்திலுள்ள சிவப்பு அணுக்களுக்கும் வெள்ளை ஜீவ அணுக்களுக்கும் நடக்கிறதாம். இந்தப்படத்தில் நடிப்பவர்கள்—உங்களுக்குத் தெரிகிற தல்லவா?—ரத்த அணுக்கள் தான்!

---

எந்தத் திட்டத்திலும் அடிப்படையான சில உண்மைகள் உண்டு. அந்த உண்மைகளை யாருமே அழிக்க முடியாது.



## தமிழ் இசைப் பாட்டுப் போட்டிகள்

1941ஹு செப்டம்பர்மீ 22-ந் தேதி கீழ்க்கண்ட நோக்கங்களுக்காக அண்ணாமலைச் சர்வகலாசாலையில், ஷை கலாசாலையின் உப அத்யக்ஷகர் அவர்களாலும், ஸிண்டிகேட் அங்கத்தினர்களாலும் தமிழ்ப் பாட்டுக்கள் போட்டி நடைபெறும்.

### போட்டியின் நோக்கங்கள்.

(i) புதிய தமிழ்ப் பாட்டுகள் இயற்றுவதை அபிவிருத்தி செய்து ஆதரவளிக்கவும், (ii) பழைய காலத்தில் பாடப் பட்டதை நேரில் கேட்டு ஞாபகத்தில் மாத்திரம் வைத்துக் கொள்ளப்பட்டு, இப்போது மறக்கப்பட்டு வரும் பழைய பாட்டுகளுக்கு புத்துயிர் அளிக்கவும் (iii) பழைய, புதிய பாட்டுகளைப் பிரசுரிக்கவும் (iv)-(a) புதிய பாட்டுகளை இயற்றவும் (b) பழைய பாட்டுகளை பாடவும், போட்டிகளை நடத்தி, மூன்று பரிசுகளை முறையே ரூ 150, ரூ 100, ரூ 50 பெறுமான பரிசுகள் வழங்கவும் (V) சங்கீத சபைகள் தங்கள் கச்சேரிகளில் தமிழ்ப் பாட்டுகளைக் கொண்டவைகளாக இருக்கும்படிச் செய்யத் தூண்டி ஆதரவளிக்கவும், ஷை போட்டிகள் நடைபெறும்.

### நிபந்தனைகள்

(1) தமிழில் பாடுவோர் எல்லோரும் போட்டியில் கலந்து கொள்ளலாம்.

(2) போட்டியில் கலந்து கொள்வோர்கள் (a) புதிய பாட்டுகளை இயற்றியவர்களாகவோ, (b) பிறரால் இயற்றப்பட்ட புதிய பாட்டுகள், அல்லது மறக்கப்பட்டு வரும் பழைய பாட்டுகள் பாடுவோராகவோ இருக்கலாம்.

புதிய பாட்டுகளை இயற்றியுள்ளவர்கள் போட்டியில் கலக்க விரும்பின் தங்கள் பாட்டுகளை அனுப்பலாம்; தங்கள் புதிய பாட்டுகளை தாங்களே பாடவும் ஆஜராகலாம்; அல்லது தங்களது புதிய பாட்டு, அல்லது பாட்டுகளைப் பாட வேறு யாரையும் அனுப்பலாம்.

பாட்டுகளைத் தாங்களே இயற்றாதவர்கள் போட்டியில் கலந்து கொள்ள விரும்பின், தங்களது பாட்டுகளை தாங்களே பாட ஆஜராக வேண்டும்.

(3) ஒரு வருஷத்தில் பரிசு பெற்றவர் அடுத்தடுத்து வரும் வருஷங்களில் போட்டியில் கலந்து கொள்ளத் தடுக்கப்படமாட்டார்கள்.

(4) ஒவ்வொரு வருஷமும் மொத்தம் 9 பரிசுகள் இருக்கும்; ரூ. 150/- பெறுமான மூன்று 3 பரிசுகளும், ரூ. 100/- பெறுமானமுள்ள 3 பரிசுகளும், ரூ. 50/- பெறுமான மூன்று 3 பரிசுகளும் ஆக மொத்தம் 9 பரிசுகள்.

புதிய பாட்டுகளை இயற்றுவோருக்கு ஒரு செட் பரிசுகள் இருக்கும்; ஆடவர்களிடையே, புதிய, பழைய அபூர்வமான பாட்டுகளைப் பாடுவோருக்கு மற்றொரு செட்; ஸ்திரீகளிடையே புதிய, பழைய அபூர்வமான பாட்டுகளை பாடுவோருக்கு மூன்றாவது செட் பரிசுகளும் இருக்கும்.

(5) ஒவ்வொரு சாஹித்யப் போட்டியாளரும் குறைந்த பக்ஷம் 6 பாட்டுகளை சாத்தியமானால் அவைகளின் குறியீடுகளுடன் (notations) 7-9-41க்கு முன்பாக சர்வ கலாசாலையில் உப அத்யக்ஷகர் அவர்களுக்கு, விலாசமிட்ட ஒரு ஸீல்ட் கவரில் அனுப்பவேண்டும். போட்டித் தினத்திற்கு ஒரு வாரத்திற்கு முன்பாக 15-9-41உ யன்றோ அல்லது அந்தத்தேதிவாக்கிலோ அறிவிக்கப்படும் தினத்தன்று அவைகளில் 4க்குக் குறையாத பாட்டுகளை பாடும்படிக் கேட்கப்படுவர்.

பாடுபவர் ஒவ்வொருவரும் (சாஹித்திய கர்த்தா அல்லாதவர்கள்) குறைந்த பக்ஷம் 15 பாட்டுகளை அவைகளின் குறியீடுகளுடன் 7-9-41க்கு முன்பாக சர்வகலாசாலையின் உப-அத்யக்ஷர் அவர்களுக்கு ஒரு ஸீல் வைத்த கவரில் அனுப்ப வேண்டும். இதில் 5க்குக் குறையாமல் பாடும்படி கேட்கப்படுவர்.

(6) எந்தப் பாட்டும் 20 நிமிஷங்களுக்குமேல் பிடிக்கக்கூடாது.

(7) எந்தப் போட்டியாளரும் தமது பாட்டுகளைப் படிக்க மாத்திரமே அனுமதிக்கப்படமாட்டார்கள்.

(8) ஏதேனும் ஒரு நபருக்கோ அல்லது சமூகத்திற்கோ தீங்கிழைக்கக் கூடிய விஷயத்தையாவது, அல்லது ஒரு மதத்தைப் பின்பற்றுவோரின் உணர்ச்சிகளை புண்படுத்தக்கூடிய விஷயத்தையாவது, க்ரௌன் மீது, தேசத்தின்மீது, அல்லது அரசாங்கத்தின்மீது தப்பபிப்பிராயம் (disaffection) ஏற்படக் கூடிய விஷயத்தையாவது பாட்டுகள் கொண்டிருக்கக்கூடாது.

(9) போட்டியாளர்களின் மதிப்பைத் தீர்மானிப்பது, வெற்றியாளர்களைத் தீர்மானிப்பது. இவைகளில் ஸிண்டிகேட் நியமிக்கக்கூடிய நீதிபதிகளின் அறிக்கையின் பேரில் ஸிண்டிகேடின் தீர்மானமே முடிவானதாகும்.

(10) பரிசு பெறும் பாட்டுகள் சர்வகலாசாலையின் சொத்தாயிருக்கும்.

(11) இயற்றப்படும் சாஹித்யங்கள் அவைகளுக்கு எதிர்பார்க்கப்படும் உயர்வான அளவைக்கு எட்டாத பக்ஷத்தில் ஸிண்டிகேட் பரிசுகளை அளிக்காமல் இருக்கத் தீர்மானிக்கலாம்.

## இந்தியாவிலுள்ள மூலப் பொருள்கள்

### ரூஸ்வெல்ட் விசாரிக்கச் சொல்லியிருக்கிறார்

யுத்தம் போகிற போக்கில் பிரிட்டன் அமெரிக்காவுக்குக் கடமைப்பட்டிருப்பது போல இந்தியாவும் பிரிட்டனுக்கு ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறது என்று சொல்லலாம். இந்தியாவிலிருந்து கிடைக்கக்கூடிய மூலப் பொருள்களை ஏராளமாக அமெரிக்கா வாங்கப் போகிறதாம். இதைப்பற்றி ரூஸ்வெல்ட் விசாரித்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. இத்துடன் பர்மாவிலும், அதைச் சுற்றியுள்ள தேசங்களில் கிடைக்கும் மூலப் பொருள்களைப் பற்றியும் ரூஸ்வெல்ட் தகவல் கேட்டிருக்கிறார். இப்படிக் கேட்டிருப்பதால், இந்தியாவிலிருந்து சில சாமான்களை அதிகமாக அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யலாம். விசாரிக்க வருபவர்கள் யார் என்று தெரியவில்லை; இதைக் குறித்து இந்திய சர்க்கார் பூரா விவரங்களையும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும் இன்னும் இது சம்பந்தமாக உத்தியோக தோரணையில் எவ்வித சமாசாரமும் கிடைக்கவில்லை என்றும் டிரிபியூனின் ஸிம்லா நிருபர் தெரிவிக்கிறார்.

—

## மாஸ்கோவில் புதிய ரஸாயன சாலை

மாஸ்கோவில் ஒரு புதிய ரஸாயன சாலை சட்ட ஏற்பாடாகி வருகிறதாம். அந்த ரஸாயன சாலைக்குள் பல புதிய சாஸ்திர ஆராய்ச்சிக் கருவிகளும மின்ஸாரக் கருவிகளும் பொறுத்தப்பட்டிருக்கின்றனவாம். அவற்றின் மூலம் அங்கேயே சூரிய வெளிச்சம், சந்திர வெளிச்சம், இருட்டு, இடி, மின்னல், குளிர், காற்று, புயல் முதலிய எல்லாவற்றையும் 'செயற்கை' யாகச் செய்து கொள்ள முடியுமாம். அப்படிக்குள்ள செயற்கைச் சீதோஷ்ணத்தில் செடி, கொடி, மரம் முதலியவைகளின் வளர்ச்சியைப்பற்றி ஆராய்ச்சி நடத்தப் போகிறார்களாம்.



## கோடிக்கணக்கான டாலர்கள் வருமானம்

### அமெரிக்க ரேடியோ கம்பெனிகளின் லாபம்

அமெரிக்காவில் ரேடியோ நிலையங்கள், கம்பெனிகளால் விளம்பரம் செய்தலாகிய வருமானங்களைக் கொண்டு நடத்தப்படுகின்றன. சென்ற 1940ம் வருஷத்தில் முக்கியமான சில கம்பெனிகள் பெற்ற வருமான லாபங்கள் கணக்கு இப்போழுது கிடைத்திருக்கிறது. கொலம்பியா பிராட்காஸ்டிஸ் ஸ்டேஷனுக்குத் தான் எல்லாவற்றிலும் அதிக வருமானமும் லாபமும் ஏற்பட்டிருக்கின்றன. அதன் வருமானம் 41,137,823 டாலர்கள். நிகர் லாபம் 5,006,634 டாலர்கள். இதற்கடுத்தது நாஷனல் பிராட் காஸ்டிங் ஸ்டேஷனுகும். அதன் வருமானம் 37,137,823 டாலர்கள். லாபம் 3,918,772 டாலர்கள்.

—

## இதாலியின் யுத்த நஷ்டவிவரம்

இதாலி யுத்தத்திலிறங்கி ஒருவருஷத்துக்கு மேலாகிறது. பாதிக்காலம் யுத்தத்தில் ஈடுபட்டிருந்த இதாலி பிரிட்டன் நஷ்டமடைந்ததைப் போல் இரண்டு மடங்கு நஷ்டமடைந்திருக்கிறது. ஜூன் மாதம் கொடுக்கப்பட்ட புள்ளிக் கணக்கில் அதுவரை பிரிட்டனுக்கு 101,056 ஆட்கள் நஷ்டமாகி யிருக்கிறது. அதேகாலத்திற்கு இதாலிக்கு 245,075 நஷ்டம் ஏற்பட்டுள்ளது. இதில் உயிரிழந்தவர்கள் 22,197 பேர்; காயமடைந்தவர் 55,617;, காணாமற் போனவர் (சிறைப்பட்டவர்) 167,259 பேர்.

—

தமிழ் ஜன சமூகத்தை அடியோடு புதுப்பித்து நிர்மாணம் செய்யவேண்டிய காலமும் தேவையும் வந்துவிட்டன.





"உக்ரெய்னில் நாஸிகளின் கடுமையான முன்னேற்றம் சுற்றுப் பலன் அளிப்பதுபோல் தோன்றும் இந்த சமயத்தில் பிரிட்டன் ரஷ்யாவுக்கு இன்னும் அதிகப்படியான உதவி செய்யக்கூடாதா என்று தோன்றலாம். ஆனால் அதற்கு எவ்வளவு இடையூறுகள் இருக்கின்றன என்று நினைத்துப் பார்ப்பது அவசியம்.

இந்த சமயத்தில் மேற்கு ஐரோப்பாவை படை யெடுப்பது என்பது நாமாகப் போய் ஹிட்லர் கையில் அகப்பட்டுக்கொள்வதாகும். இறுதி வெற்றிக்குமுன் இப்படிப்பட்ட ஒரு படையெடுப்பு செய்யத்தான் வேண்டும். செய்யத்தான் போகிறோம் என்

## ஏன் இப்பொழுது ஐரோப்பாவை படையெடுக்க முடியாது?

### லெப்டினென்ட்-ஜெனரல் ஸர் டக்ளஸ் கருத்து

பது மிகவும் நிச்சயமான விஷயம். ஆனால் இப்பொழுது படையெடுப்பது என்பது பீரங்கிகளின் உதவியின்றி காலாட்படை கொண்டு தாக்குவதை ஒக்கும்.

#### ஆகாய ஆதிபத்யம் அவசியம்

ஜெர்மனியையோ, ஜெர்மன் வசப்பட்ட நாடுகளையோ படையெடுக்கு முன் நேச தேசத்திவருக்கு ஆகாய ஆதிபத்யம் மிகவும் அவசியம். ஜெர்மனியை நாம் வெடி விமானங்களால் தாக்கிக் கொண்டிருப்பதை அதிகப்படுத்துவதும் மிகவும் தப்பான ராணுவ தந்திரமாகும். அதனால் நாம் ஆகாய ஆதிபத்யத்திற்காகப் போட்டிருக்கும் நீண்ட காலத் திட்டம் பங்கமுறும்.

ஆகவே இந்த சமயம் நாம் செய்யக்கூடிய முயற்சி யெல்லாம் பட்டறைகளிலும், ராணுவ பயிற்சி அளிப்பதிலும் தான். ரஷ்யர்கள் தங்களால் முயன்ற மட்டும் போர் புரிந்து கொண்டிருந்தால், கடைசியானதும், மிகப் போதுமான போருக்கு வேண்டிய "ஆயுதங்களைத்" தயார் செய்ய பிரிட்டனுக்கும், அமெரிக்காவுக்கும் அவகாசம் கிடைக்கும். ஆனால் இதனால் சாம்ராஜ்யப் படைகள் இதுவரையில் ஒன்றும் செய்யவில்லையெனறோ, அல்லது செய்யாமல் இருக்கின்றன என்றோ அர்த்தமல்ல.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இப்பொழுது பெரிய "இடுக்கி" யொன்றைத் தயார் செய்ய வேண்டியிருக்கிறது. இந்த இடுக்கியின் ஒரு பாகம் பிரிட்டிஷ் விமானப் படையாகும். இன்னொரு பாகம் சாம்ராஜ்யப்படைகளும் அவர்களுடன் கூட ஜெஸ்டாப்போ ஆட்சியிலிருந்து விடுவிக்கப்படும் ஜனத் திரளுமாகும். இவர்கள் நம்முடன் சேர்ந்து வேலை செய்யத் தயாராயிருக்க வேண்டும்.

ஜெர்மன் சேனைகளுக்கும், ஜெர்மன் ஆகாயப் படைகளுக்கும் ரஷ்யர்கள் கிழக்கே வேலை கொடுத்து வைக்கும் ஒவ்வொரு நாளும் இப் பெரிய "இடுக்கி" செய்து முடிக்கும் நாளை நெருங்கச் செய்யும். முழுவதும் தயாராவதற்கு முன் இந்த ஆயுதத்தை உபயோகித்தால் எல்லாவற்றையும் இழந்து விடுமாம். எதிர்த்து நின்று போரிடுவதால் கிடைக்கும் அவகாசத்தைப் பார்க்கும் போது ரஷ்யாவில் பிரதேசங்கள் கைவிட்டுப் போகும் நஷ்டம் பிரமாதமில்லை. குஸ்தி எங்கே நடந்த போதிலும் சரி, ரஷ்யர் நாஸியைப் பிடித்துக் கொண்டிருக்கும் வரையில் நமக்கு அவகாசம் கிடைத்துக் கொண்டிருக்கும். மிகப் பலம் கொண்ட ஆகாயப்படை கொடுக்கும் குத்துகளால், நாஸி உறுதி தளராத வரையில் பிரிட்டனும், ரஷ்யாவும் சேர்ந்தே இப் பெரிய ஆகாயப் படையை அமைக்கலாம். வசப்பட்ட நாடுகளில் உள்ள மக்கள் எதிரி வரிசைகளுக்குப் பின்னல் நாச வேலை முதலியவற்றில் ஈடுபட்டு உதவி செய்யாத பட்சத்தில், பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் பெரிய படை கொண்டு ஜெர்மனி மேல் படையெடுக்க முடியாது."

—

## பெரிய லைப்ரரி மூடப்பட்டது

உலகத்தில் மிகப் பெரிய புஸ்தக சாலைகளில் ஒன்றுகிய வாடிகன் லைப்ரரி சமீபத்தில் தற்காலிகமாக யுத்தகாலம் முடியும் வரை மூடி விடப்பட்டதாக 'டைம்ஸ்' எழுதுகிறது. காரணம், அங்கே கூடும் மாணவர்கள் தங்கள் படிப்பையோ, ஆராய்ச்சியையோ நடத்துவதை விட்டு ராஜீய விஷயங்களைப் பற்றி சர்ச்சை நடத்திக் கொண்டிருந்ததுதான் என்று கூறப்படுகிறது.

—

## விஸ்வபாரதிக்கு ரூ 25, 000 நன்கொடை

சாந்திநிகேதனத்தில் உள்ள கவி தாகூரின் விஸ்வபாரதிக்கு மத்திய சர்க்கார் இவ் வருஷத்தியப் படஜெட்டில் ரூ 25,000 மான்ய மளித்திருப்பதாகத் தெரிகிறது. இச் செய்தியை ஆவி பிரியுமுன் கவியரசருக்கு, ஸர் கிரிஜா சங்கர் வாஜ்பேயர் தெரிவித்திருந்ததாகவும் சொல்லப்படுகிறது.

# இரங்கூன் நகரம் காலிசெய்யும் திட்டம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வார்கள். பிறகு அங்கிருந்து பர்மாவின் மேல் பிரதேசங்களிலுள்ள விடுதிகளுக்கு அழைத்துச் செல்லப் பெறுவார்கள்.

ஜில்லாக்களில் காலி செய்யும் பொறுப்புகள் சம்பந்தமான விஷயங்களை டெப்டி கமிஷனர் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம்.

### நகரம் காலிசெய்யும் திட்டத்தின் முன்னேற்பாட்டுப் பகுதி

நகரம் காலி செய்யும் திட்டத்தின் முன்னேற்பாட்டுப் பகுதிக்கு அதிகாரிகள் உத்திரவு அளித்து விட்டால், காலி செய்யும் திட்ட சம்பந்தமான உத்தியோகஸ்தர்கள் அனைவரும் தங்களுக்குரிய கடமைகளை ஏற்றுக் கொள்வார்கள்.

முக்கியமான வேலைக்காரர்களாகப் பதிவு செய்யப்பெற்றவர்கள், தங்களுடைய உத்தியோகங்களில் பொருந்தியிருப்பார்கள். ஆகாய விமானத் தாக்குதல் நேருங்காலத்தில், பதிவு செய்து கொண்டவர்களும், கொள்ளாதவர்களுமான இரங்கூன் பிரஜா ஊழியர்கள், தங்களுடைய குடும்ப கவலைகளிலிருந்தும், மற்றைய பொறுப்புகளிலிருந்தும் நீங்கியிருக்க வேண்டும். இத்தகைய நிலையிலிருந்து வேலை செய்யாதவர்கள் நெருக்கடியான காலத்தில் நகரில் மற்றவர்களுக்குப் பாரமாயிருப்பர். நெருக்கடியான காலத்தில் இரங்கூனிலிருக்க விரும்பாத சில உத்தியோகஸ்தர்களும் இரங்கூனிலிருந்து சென்று விடலாம். இரங்கூன் ஜெயில் ஏற்கனவே பூரணமாகக் காலி செய்யப் பெற்றிருக்கிறது.

பள்ளிக்கூட மாணவர்கள், பெற்றோர்களுடன் நகரத்தைக் காலிசெய்து செல்வர். அச்சமயத்தில் கலாசாலைகளும், கல்லூரிகளும் மூடப்பெறும். இரங்கூன் நகரிலிருந்து சென்றுள்ள மாணவர்கள், தங்கள் இருப்பிடத்திற்கு அருகாமையிலுள்ள கலாசாலைகளில் சேர்ந்து வாசிக்கலாம்.

முன்னெச்சரிக்கையாக தாங்களாகவே காலி செய்ய விரும்புவர்கள், தங்கள் குடும்பங்களைப் பத்திரமான இடங்களுக்குச் சேர்க்கவேண்டிய ஏற்பாடுகளை உத்தியோகஸ்தர்களின் ஆலோசனையின் மீது செய்யலாம். ரங்கூன் நகரத்தில் முதல் வெடிகுண்டு விழுவதற்கு முன்பே, முன்னேற்பாடான காலிசெய்யும் திட்டம் அறிவிக்கப் பெறும் என நம்பப்படுகிறது.

யுத்தப் பிரகடனம் செய்யப் பெற்ற பொழுது அல்லது முதல் விமானத் தாக்குதல் ஏற்பட்ட பொழுது, இரங்கூனிலுள்ள பொது மக்கள், பெரும்பான்மையாக இந்தியர்கள், குழப்பமும் பீதியும் அடைவார்கள். விமானங்கள் திரும்பிச் சென்றதும், சங்கநாதங்கள் மூலம் இவர்களுக்குத் தெரிவிக்கப்பெறும். இவர்கள் உடனே ரயில்வே ஸ்டேஷன்களிலும், ஸ்டீமர் ஜெட்டிகளிலும் வந்து சேரவேண்டும். அங்கிருந்து இவர்கள் அழைத்தேகப் பெறுவார்கள். இந்த பொது ஜனங்கள் எவ்வளவு விரைவில் அபாயத்திலிருந்து அழைத்தேகப்பெற வேண்டுமோ அவ்வளவு விரைவில் அழைத்தேகப் பெறுவார்கள். ஏனெனில் இவர்கள் விரைவில் அழைத்தேகப் பெருவிடில், நகரில் மற்றவர்களுக்கு இடையூறுகள் ஏற்படும். இவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது சம்பந்தமாக இங்கிலீஷ், பர்மா, சீன, உர்து, குஜராத்தி, தமிழ், ஹிந்தி, தெலுங்கு, ஒரியா, வங்காளி ஆகிய மொழிகளில் பிரசுரித்து விளம்பரம் செய்யப்பெறும்.

நெருக்கடியான சமயத்தில் நகரத்திலிருந்து காலி செய்யும் மக்கள் எந்த ரயில்களிலும், எந்தப் படகுகளிலும் ஏறிச் செல்லலாம். அச் சமயத்தில் போக்கு வரத்துக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்யப் பெறும்.

நகரத்தைக் காலி செய்து செல்பவர்கள் இயலுமானால் கீழ்க்கண்டவைகள் அடங்கிய கை மூட்டைகளை எடுத்துச் செல்லலாம்;- மாற்றி கொள்ள உடுப்புகள், படுக்கை, சமைப்பதற்கும் உண்பதற்கும் பாத்திரங்கள், 24 மணி நேரத்திற்கு வேண்டிய உணவு, நூறு ரூபாய்க்கு மேற்படாத ரொக்கம், சொத்துக்கள் முதலியன.

---

இஷ்யூக்களின் பைசலுக்காக ஸப்ஸ்டிடூடெட் சம்மன்ஸ்.

[C. P. C. ஆர்டர் 5, விதி 1 & 5ப்படி]

## தட்டோன் டிஸ்டிரிக்ட் கோர்ட்டு

சிவில் ரெகுலர் நிர் 12/1940.

A. L. A. உடையம்மை ஆச்சி, ஷியார் ஏஜண்டு AR. ராமனுதன் செட்டியார் மூலம். } வாதி.

P. S. A. L. செட்டியார் பர்மா வகையரு } பிரதிவாதிகள்.

தென்னிந்தியாவில், ராமநாதபுரம் ஜில்லா கல்லுப்பட்டியில் வசிக்கும் லேவாதேவிக்காரர், S. P. நாருபனன் செட்டியாருக்கு நோட்டீஸ்:—

ஈகுவிடபிள் அடமானத்தின் பேரில் உங்களிடத்திலிருந்து வரவேண்டிய டிபாசிட்டும் வட்டியும் சேர்ந்து ரூ. 48,503—11—0ஐ வரப்பற்ற உங்கள் பேரில் வாதி வக்கீலான Mr. பிள்ளை வியாஜ்ஜியம் செய்து, 22—9—41ல திங்கட்கிழமை யன்று முற்பகல் 10 மணிக்கு நீங்களாவது, உங்கள் பவர் ஏஜண்டாவது அல்லது உங்கள் இன்ஸ்டரக்ஷன் பெற்ற அட்வோகேட் அல்லது ப்ளீடராவது வியாஜ்ஜிய சம்பந்தமான எல்லா விஷயங்களுக்கும் ஜவாப் சொல்ல வாய்தா ஏற்பட்டிருக்கிறது. அது சமயம் ஷை எவரேனும் விசாரணைக்கு ஆஜராகாத பக்ஷத்தில் உங்களை யன்னியில் இஷ்யூக்கள் முடிவு செய்யப்படும்.

உங்கள் காப்புக்கு ஆதாரமாக விருக்கும் சாக்ஷிடங்களையும் டாகுமெண்டுகளையும் நீராவது உங்கள் அட்வோகேட்டாவது கொண்டு வர வேண்டியது. நீங்கள் எழுத்து மூலம் ஏதாவது ஸ்டேட்மெண்டு தாக்கல் செய்யவிரும்பினுல் அதை வாய்தாத் தேதிக்கு நான்கு நாட்களுக்கு முன்னதாகவே தாக்கல் செய்யவேண்டும்.

இதில் இக்கோர்ட்டாரவர்களின் கையெழுத்தும் முத்திரையும் 11-8-41 இடப்பட்டது.

(Sd) BA BA,

உத்தரவுப்படி,

Sd:——

ஹெட் கிளார்க், டிஸ்டிரிக்ட் அண்டு செஷன்ஸ் கோர்ட், தட்டோன்.

---

## ஏல விற்பனை

I. C நிர் 14/1930 (ரங்கூன்)
T. S. N. பர்ம்—இன்சால்வென்ஸி.

திருப்பத்தூர் தாலூகா, குன்னக்குடி கிராமம் மேல ரத வீதியில் ஒரு வீடும்,

பட்டுக்கோட்டை தாலூகா, கந்தர்வகோட்டை ஜமீனில் ஒரு தார்சு பங்களாவும் காலியிடமும்,

ஏல விற்பனையாளர் மெஸர்ஸ் முர்ரே அண்டு கம்பெனியாரால் 1941-வஸ செப்டம்பர்-மீ 10, 11ௗ களில் 10 மணிக்கு அந்தந்த ஸ்தலத்தில் ஏலம் போடப்படும்.



Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi (S. INDIA)

